
மக்ளீன்ஸ்
உபயோகித்து
அந்த அதிகமான வெண்மையைப்
பாருங்கள்!
இவ்விதம் சோதியுங்கள்
1. உங்கள் நாக்கினால் பற்களைத் தடவுங்கள். அவற்றின் மேலுள்ள பாசியை உணர்கிறீர்களா?
2. இப்போது, மக்ளீன்ஸ் பற்பசைகொண்டு பற்களைத் தேயுங்கள். அது பற்களைச் சுத்தம் செய்து, வெண்மையாக்கிக் காப்பதுடன் உங்களுக்குப் புதுமையான உணர்ச்சியை அளிப்பதை உணர்வீர்கள்.
3. அந்த அதிகமான சுத்தத்தை உணருங்கள்... அந்த அதிகமான வெண்மையைப் பாருங்கள்.
Macleans
tooth paste
மக்ளீன்ஸ் பழுப்பு நிறமடைந்த
பற்களை வெண்மையாக்குகிறது!
MTP/4P/3/63 TMA



தொல்லை
பல் முளைக்கும்போதா?
காற்று பிரியும்போதா?
வயிற்றுவலியாலா?



# மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர்

## கொடுத்து மீண்டும் புன்னகை தோன்றக் காணுங்கள்

இக்காலத் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் தருகின்றனர். அது இனிய சுவையுள்ளது; சுகாதார முறைப்படி 'பேக்' செய்யப்பட்டுள்ளது.

அதிர்ஷ்டக் குழந்தைகளுக்கு மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கிடைக்கிறது



இப்பொழுது
அழகான, புதிய சிவப்பு நீல நிறங்களில் 'பேக்' செய்யப்பட்டு கிடைக்கிறது

GEOFFREY MANNERS & COMPANY LIMITED

நலன்களைப் பகிர்வதே நேசத்தின் பண்பு...

# தொழிற்சாலைகள் இயங்கக் கூடுதலான சக்தி



தன்னலமற்று, தருணத்தில் உதவுவதே நம் இரு நாடுகளுக்கும் இடையே வளர்ந்துள்ள நட்பின் அடிப்படையாம். பாரத-ஜெர்மன் ஒத்துழைப்பிலுள்ள ஈடுபாடுகளில் மிகவும் முன்னேற்றமடைந்து, அதிக அளவில் பயனளிப்பது இயந்திரத்தொழில் துறையாகும். பாரதமெங்கும் ஆங்காங்கு காணப்படும் பிரம்மாண்டமான எஃகுத் தொழிற்சாலைகளும், டிராக் தொழிற்சாலைகளும், சிறிய தொழிற்சாலைகளும் பாரத-ஜெர்மன் கூட்டுறவுக்கு சிறந்த சான்று.

ஐக்கிய
ஜெர்மன்
குடியரசு



"ஆம், உன் தகப்பனார் உன் வயதாக இருக்கும் பொழுதிலிருந்தே, நான் இந்தப் பாங்கில் லேவா தேவி வைத்துக் கொண்டிருந்தேன். நீயும் அதைத் தொடர்ந்து செய்து கொண்டிருப்பது மிகவும் நல்லதே."

கடந்த 50 ஆண்டுகளுக்கு மேலாக தனியார் துறையில் நிர்வகிக்கப்படும் இந்தியன் ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகளில் மிகப் பெரிய தான சென்ட்ரல் பாங்க், இந்தியன் பாங்கிங் தொழிலில் பல துறையிலும் தேவையைப் பூர்த்தி செய்து வந்திருக்கிறது. 360க்கு மேற்பட்ட கிளைகள் கொண்ட சென்ட்ரல் பாங்க் தற்பொழுது பாங்கித் தொழிலில் பூரண சேவையும் அளிக்க வாய்ப்புள்ள தாகத் திகழ்கிறது.

## தி சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா லிட்.

**டிபாஸிட்டுகள் ரூ. 264.5 கோடிக்கு மேல்**

SISTA'S S. CBI

# கல்கி பொருளடக்கம்

## "நற்புகழ் சூழவில்லை"

மல்லிகைப் பந்தலின் கீழிருந்தும் நான்
மணம் நுகர வில்லை - ஒரு
கணம் நுகர வில்லை - எழில்

நல்லிசை யாழை வைத்திருந்தும் நான்
நாதம் இசைக்க வில்லை - இன்ப
கீதம் இசைக்க வில்லை - திணைக்

கொல்லையில் தங்கியும் பச்சைப்பசுங்கிளிக்
கூட்டத்தைக் காண வில்லை - அதன்
ஆட்டத்தைக் காண வில்லை - நூல்

சொல்லிய வாசகம் கற்றிருந்தும் அந்தச்
சொற்படி வாழ வில்லை - எனை
நற்புகழ் சூழ வில்லை.

— வித்துவான் எம்.எஸ்.மணி

குரோதி ஐப்பசி 9 — அக்டோபர் 25


நெருப்பு, நெருப்பு!
உதவ வாருங்கள்!!
நீதி
ஸுப்ரீம் கோர்ட்
PK


லால்பஹாதுர்ஜீ வருக!
சிறிதுகாலம் நிம்மதியாய்
இருந்தீர்களா?
விலை உயர்வு
P.M.
உணவுப் பற்றாக்குறை
PK



மலர் 24

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 13

# குருஷேவ்

நிகிடா குருஷேவ் சோவியத் ருஷியாவின் பிரதமர் பதவியிலிருந்தும், கம்யூனிஸ்ட் கட்சியின் பிரதம காரியதரிசிப் பதவியிலிருந்தும் ஓய்வு கேட்டுப் பெற்றுக் கொண்டு விலகி விட்டார். இன்று உலகிலுள்ள ஆட்சியாளர்களில் குருஷேவ் தலைசிறந்த நிர்வாகத் திறமை பொருந்தியவர். யார் மனதிலும் ஆழமாகப் பதிந்து விடும் அசாதாரண மனிதர். பதவி ஏற்ற ஆரம்ப காலத்தில் அவர் பனிப்போர் கெடுபிடிகளுக்கும் யுத்த அபாயங்களுக்கும் காரணமாக இருந்தது குறித்து யாவரும் வருந்தினோம். இந்த வருத்தத்துக்கு ஈடுகட்டுவதுபோல் சமீப காலங்களில் அவர் உலக சமாதானத்துக்காக நல்ல முறையில் பணி புரிந்தார்.

அக்டோபர் பதினைந்தாம் தேதியன்று கலவரமோ கலகமோயின்றி, கட்சியின் ஏகோபித்த அங்கீகாரத்துடன் பிரதமர் பதவி கோஸிகினுக்கும், கட்சிக் காரியதரிசிப் பதவி ப்ரெஸ்நேவுக்கும் அளிக்கப்பட்டது கம்யூனிஸ சரித்திரத்தில் ஒரு விசேஷமான சம்பவம்.



மொத்தத்தில் குருஷேவ் அவர்கள் பதவியிலிருந்து விலகி விட்டாரே என வருந்துகிறோம். கிராமப்புறத்தில் வளர்ந்த குருஷேவ் வெளிப் பார்வைக்கு முரட்டுத்தனமாக நடந்து கொண்டாரெனினும், உள்ளூற நல்லவராகவும், புத்திசாலியாகவும், அன்புக்கு உரியவராகவும், கபடமில்லாமல் வெளிப்படையாகச் செயல் புரிபவராகவும் இருந்தார். அவரை அடுத்துப் பதவி ஏற்கும் கோஸிகின் அவர்களும் ப்ரெஸ்நேவ் அவர்களும் குருஷேவின் நல்ல இயல்புகளைப் பின்பற்றுவரென நம்புவோமாக.



பாரதீய வித்யா பவனத்தின் சென்னை கேந்திர கட்டிட நிதிக்காக இம்மாதம் நாலாம் தேதி மாலை பம்பாயில் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் ஓர் அற்புத மான கச்சேரி செய்தார். பவனத் தலைவர் முன்ஷி, ஸ்ரீமதி முன்ஷி, இசை நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்த ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம், ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட் ஆகியோரோடு எம். எஸ். குடும்பத்தினரைக் காண்கிறோம்.

என்று எச்சரிக்கை செய்தவர்கள் தீர்க்கமாக யோசித்தே சொல்லி வந்திருக்கிறார்கள் என்பது தெளிவாகிறதல்லவா? கம்யூனிஸ்டுகளிடையே மூளும் சண்டை குடும்பச் சண்டை போன்றது. அது அதிக நாள் நீடிக்காது. சீக்கிரத்தில் ஒத்துப் போவார்கள். உட்பிளவை நம்பி நாம் நமது வெளி நாட்டுக் கொள்கை வகுப்பது, மண் குதிரையை நம்பிக் கொண்டு ஆற்றில் இறங்குவது போலத் தான்.

இனியேனும் பழைய தவறுகளை விட்டு, அறிவுடையோர், ஆற்றலுடையோர், மனிதப் பண்பு தெரிந்தவர்கள் கூறும் அறிவுரைகளைக் கேட்டு நடப்பது சர்க்காரின் கடமையாகும்.

# அபாயத்தை உணர வேண்டும்

சர்க்கார் நவீன யந்திரங்களுடன் அரிசி மில்கள் ஆரம்பித்து நடத்தப் போவதாகச் சொல்லப் படுகிறது. இதனால் ஒரு மணி தானியம்கூட அதிகம் உற்பத்தியாகாது. தீட்டிய அரிசியின் வைட்டமின் சத்துக் குறைந்து போகவே சர்க்கார் திட்டம் உதவும்.

நூற்றுக் கணக்கான மக்கள் பட்டினி வயிற்றுடன், கடும் வெய்யிலில் 'நியாய' விலைக் கடைகள் முன் மணிக் கணக்காக 'கியூ' நின்று ஒரு புதுப் படியும் இரண்டு புதுப் படியும் அரிசி வாங்கிப் போகும் பரிதாபக் காட்சியை எல்லா நகரங்களிலும் கண்டு வருகிறோம். சிலருக்கு அரிசியே கிடைக்காமல் மனம் நொந்தும் திரும்புகிறார்கள். முன்பு சில்லறை வியாபாரம் செய்து வந்த கடைகளில் எல்லாம் இப்போது 'கையிருப்பு இல்லை' என்ற பலகை தொங்குவதைப் பார்க்கிறோம். அரிசி லாரிகளை மக்கள் நடுவழியில் நிறுத்தி வைத்துத் தானியத்துக்காகப் பரிதவிக்கும் கொடுமையைப் பற்றியும், போலீஸ் காவலுடன் அரிசி லாரிகள் செல்வது பற்றியும் செய்திகளைப் பத்திரிகைகளில் படிக்கும் போது நெஞ்சு நோகிறது.

கொள்முதல் செய்வது, விற்பனை செய்வது இரண்டிலுமே சர்க்கார் எவ்வளவு திறமை இல்லாமல் இருக்கிறது என்பது நாளுக்கு நாள் வெட்ட வெளிச்சமாகி வருகிறது. விவசாயிகளைப் பயமுறுத்திக் கொள்முதல் செய்து

# தொழிற்கட்சியின் வெற்றி

பிரிட்டனில் தொழிற் கட்சி வெற்றியடைந்து மிகக் குறுகிய வித்தியாசத்தில் பதவிக்கு வந்திருக்கிறது. தொழிற் கட்சி 317 ஸ்தானங்களில் வெற்றி பெற்றிருக்கிறது. கன்ஸர்வேடிவ் கட்சி 304 ஸ்தானங்களில் வெற்றி பெற்றிருக்கிறது! வித்தியாசம் 13 ஸ்தானம்தான்!

புதிய பிரதமராக ஹெரால்ட் வில்சன் அவர்கள் பதவி ஏற்கிறார். இவரது பதவிக் காலத்தில் பிரிட்டன் செழித்தோங்கவும், இந்தியா - பிரிட்டன் நல்லுறவுகள்வளரவும் பிரார்த்திக்கிறோம்.



புதிய பிரதம மந்திரி ஹெரால்ட் வில்சன்

பதின்மூன்று ஆண்டுகளுக்கு முன், சோஷலிஸக் கொள்கையைப் பின்பற்றும் தொழிற் கட்சிபதவிக்குவந்தது. சோஷலிஸக் கொள்கைப்படி தொழில் நிறுவனங்களைச் சர்க்கார் உடைமையாக்கத் தொடங்கியது. அதன் பலன் பல ஸ்தாபனங்களில் நஷ்டமும் கஷ்டமும் ஏற்படலாயின! மீண்டும் தனிப்பட்டவர்களின் நிர்வாகத்துக்கே அவை ஒப்படைக்கப்பட்டன. அதிலிருந்து பிரிட்டிஷ் தொழிற் கட்சி தேச உடைமையாக்கும் விஷயமாகப் பேச்சே எடுப்பதில்லை. அதற்குப் பிறகு நடந்த மூன்றுதேர்தல்களிலும் தொழிற் கட்சி தோல்வியுற்று வந்தது; கன்ஸர்வேடிவ் கட்சியே பதவியிலிருந்து வந்தது.

இந்தத் தடவை பிரிட்டிஷ் மக்கள் தொழிற் கட்சியைத் தேர்ந்தெடுத்திருக்கின்றனர். இது அவர்களுடைய சிறந்த ஜனநாயகப் பண்பைக் காட்டுகிறது. எந்தக் கட்சியும் நீடித்துப் பதவியிலிருந்தால் சர்க்கார் நிர்வாகமும் தேசமும் கெட்டுப்போகும் என்று நன்கு உணர்ந்த மக்கள், இந்தத் தடவை மாற்றுக் கட்சிக்கு நிர்வாகம் நடத்த ஒரு வாய்ப்பளித்திருக்கிறார்கள். அவ்வளவுதான். கன்ஸர்வேடிவ் கட்சியின் மீது வெறுப்போ, தொழிற் கட்சி மீது தீவிரப் பற்றுதலோ ஏற்பட்டதன் விளைவாக இந்த மாறுதல் ஏற்படவில்லை என்பதைக் குறுகிய மெஜாரிட்டியே தெளிவாக எடுத்துக் காட்டுகிறது! வலுவான எதிர்க் கட்சி ஜனநாயகத்தை வளர்க்கும். பிரிட்டிஷ் மக்களிடம் காணும் ஜனநாயகப் பண்பு பாரத நாட்டிலும் ஏற்பட்டால்தான் நம் நாட்டில் உண்மையான ஜனநாயகம் தழைக்கும்.

# சீனுவிடம் அணுகுண்டு

சீனு 'தன்னிடமும் அணுகுண்டு இருக்கிறது என்பதை உலகுக்கு அறிவித்துவிட்டது. மேற்கத்திய நாடுகள் அணுகுண்டு பெற்றிருப்பதற்கும் சீனு பெற்றிருப்பதற்கும் பெரிய வித்தியாசம் உண்டு. மேற்கத்திய நாடுகள் அணுகுண்டு பெற்றிருந்தாலும், அவைகளுடைய ஜனத்தொகை குறைவாக இருப்பதால் எதிராளியின் அணுப் போருக்கு அஞ்சி அதை உபயோகிக்காது. சீனுவோ அபரிமிதமான ஜனத்தொகை — அறுபது கோடி மக்கள் — உள்ள நாடு. சீனுவின் முக்கியமான பிரச்னை தன் மக்களுக்கு உணவு படைக்க முடியாததே. இதனுல்தான் ஒரு தடவை சீனத் தலைவர், '' எங்களுக்கு அணுகுண்டைப் பற்றிப் பயமில்லை. அணுகுண்டு விழுந்தால் அதற்குப் பலியிட எங்களிடம் போதிய மக்கள் இருக்கிறார்கள். எங்கள் ஜனத்தொகையில் பாதி முடிந்தாலும் மிஞ்சும் ஜனத்தொகை முப்பது கோடியாகும்!'' என்று பெருமிதத்தோடு கூறினார்.

இதையெல்லாம் பார்க்கும்போது வீட்டுக் கூரையின் மீது வெறி பிடித்த ஒருவன் தீப்பந்தத்தைப் பிடித்துக் கொண்டு நின்றால் எப்படி இருக்குமோ அந்த நிலையில் இன்று சீனு உலகத்தின் கூரை மீது நிற்பதாகத் தோன்றுகிறது.

இந்த நிலையில் இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையில் மிகவும் ராஜதந்திரத்துடன் நடந்து கொள்ள வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. ருஷ்யாவை ராணுவ உதவிக்கு நம்பிப் பயனில்லை

கருக்குத் தானிய விநியோகம் செய்யும் கொள்கையை அரசாங்கம் நீண்ட காலம் தொடர முடியாது. குறுகிய எல்லைக் கோடுகளுக்குள் தானிய மண்டலங்கள் அமைத்து, இயற்கையாகத் தானியங்கள் விற்பனையாகாதபடி செய்து, கட்டாயக் கொள்முதல் செய்வது தேச ஐக்கியத்தையே குலைத்துவிடும்.

எவ்வளவு மூடிமறைத்தாலும், தனிப்பட்ட வியாபாரிகளுக்குள்ள திறமை சர்க்காருக்குக் கிடையாது என்பது அம்பலமாகிக் கொண்டு வருகிறது. ஏதோ கொஞ்சம் வசதி உள்ளவர்கள் கறுப்புச் சந்தையில் வாங்கிக் கொண்டு விடுகிறார்கள்; க்யூவில் கால் கடுக்க நிற்கும் மற்றவர்களைப் போலீஸ் 'கவனித்து'க் கொண்டு வருகிறது. இருந்தபோதிலும் ஆங்காங்கு மக்கள் கிளர்ச்சிகளில் இறங்கியிருப்பதைச் சர்க்கார் ஊன்றிப் பார்க்க வேண்டும். அபாயத்தை உள்ளபடி உணர வேண்டும். நிலக் கொள்கைகளைச் சர்க்கார் மாற்றிக் கொண்டு பணவீக்கத் திட்டங்களையும் கைவிட்டாலொழிய இப் பிரச்னை ஒருநாளும் தீராது. கன்ட்ரோல்களால் நிலைமையைச் சமாளிக்க முடியாது.

புகழ் வாய்ந்த அமெரிக்கப் பத்திரிகையான 'நியூயார்க் டைம்'ஸில், தாமஸ் பிராடி என்ற நிருபர் எழுதுவதாவது:

> 'நேரு அவர்களின் நிர்வாகத்தில் இருந்த குற்றம் குறைகளே உணவுப் பற்றாக்குறைக்குக் காரணம் என்பது தெளிவு. நேரு அவர்களின் பிரத்தியேக ஜோதி மயக்கத்தால் பசித்த மக்கள் தங்கள் கஷ்டத்தைப் புலம்பாமல் மௌனமாக இருந்திருக்கக் கூடும். ஆனால் லால் பஹாதுர் சாஸ்திரி பொதுமக்களின் ஆத்திரத்துக்கு முகம் கொடுத்தாக வேண்டும். தமது மக்களுக்கு உணவு படைப்பதில் எவ்வளவுக்கு இயலுமோ அவ்வளவுக்கு அவர் உழைத்தாக வேண்டும்.'

# என்ன சேதி?

## பொருளற்ற மகாநாடு

கெய்ரோவில் நடந்த தடஸ்த நாடுகளின் கூட்டம் உபயோகமாக எதுவும் சாதிக்கவில்லை. சமாதானத்துக்காக ஒருங்கே கூடி முயல்பவர்களின் மகாநாடாக அது அமையவில்லை. தாங்களும் ஒரு புதிய கோஷ்டி என்பதாகக் கருதி மகாநாட்டில் அங்கம் வகித்த நாடுகள் கோஷம் எழுப்பின. அதே சமயத்தில் இந்த மகாநாட்டில் கூடியிருந்தவர்களிடையே ஐக்கியமில்லை என்பதும் வெளியாயிற்று. அங்கம் வகித்த நாடுகளுக்கிடையே உள்ள பெரிய விரிசல்கள் வெளிப்பட்டன. பெருத்த கூச்சல்களுக்கும், பத்திரிகைகளின் பிரமாதமான விளம்பரத்துக்குமிடையே மகாநாடு வியர்த்தமாகக் கூடி முடிந்தது. உலக சமாதானத்துக்கோ, இந்தியாவின் நலன்களுக்கோ கெய்ரோ மகாநாட்டினால் எள்ளளவும் உதவியில்லை. நமது பிரதமர் லால் பஹாதுர் அவர்கள் நன்றாகப் பேசிப் பாராட்டுப் பெற்றார் என்பது மகிழ்ச்சிக்குரிய உண்மை. இதனால் நாட்டுக்குப் பலன் ஏதுமில்லை.

## பம்பாய்த் தமிழருக்கு...

பம்பாய் வடாலாவிலுள்ள ஸவுத் இந்தியன் வெல்ஃபேர் சொஸைட்டி அங்குள்ள தென்னாட்டு மக்களின் நலனுக்குச் சிறிய பணி ஆற்றி வருகிறது. மூவாயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் கல்வி கற்கும் சொஸைட்டியின் பள்ளி, தரத்துக்குப் பெயரெடுத்த ஒரு கல்வி நிலையம். இந்நிலைய நிதிக்காக இம்மாதம் 23, 24, 25 தேதிகளில் முறையே பள்ளி மாணவர்களின் கதம்ப நிகழ்ச்சியும், குமாரி கமலா கோஷ்டியினரின் பரத நாட்டியமும், ஸ்ரீமதி பத்மினியின் 'கண்ணகி' நாட்டிய நாடகமும் பம்பாய் ஷண்முகானந்தா ஹாலில் நடைபெறுகின்றன. பம்பாய் வாழ்பெரு மக்கள் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு கல்விப் பணிக்கு உதவ வேண்டுகிறோம்.

## இந்தியாவின் வெற்றி

பம்பாயில் ஆஸ்திரேலியக் கோஷ்டிக்கும் இந்தியக் கோஷ்டிக்கும் நடந்த இரண்டாவது கிரிக்கெட் டெஸ்ட் ரஸிகர்களின் மனத்தை விட்டு என்றும் அகலாது. கடைசி நாள் வரை எந்தக் கோஷ்டிக்கு வெற்றி கிட்டுமோ என்ற ஸஸ்பென்ஸைக் கொடுத்து, இந்தியக் கோஷ்டியினரில் காப்டன் பட்டாடியும், மஞ்சரேகரும், போர்டேயும் நிறைய எண்ணிக்கை எடுத்து வெற்றித் தேவதையை இந்தியக் கோஷ்டியின் பக்கம் திருப்பியதை யாரால் மறக்க முடியும்? ஆஸ்திரேலியா இந்தியாவை முழு மூச்சுடன் 'அவுட்'டாக்கிவிட முயன்றும், இந்தியக் கோஷ்டியினர் அவர்களது ஆசையை நிராசையாக்கி விட்டனர். இந்த இணையற்ற சாதனையைச் செய்த இந்தியக் கோஷ்டியின் காப்டன் பட்டாடியும் அவரது சகாக்களும் பாராட்டுதலுக்குரியவர்கள்.

# கந்தன் கருணை

திருமுருக **கிருபானந்தவாரியார்**

கந்த புராணத்தைத் தொடர் கட்டுரைகளாக வழங்குகிறார்



**கல்கி**

**நவம்பர் 8ந் தேதி இதழில் ஆரம்பமாகிறது!**

# அறிந்தீர்களா ?
# இதுதான் உங்கள்
# பனாமா




1 தேர்ந்தெடுத்த வர்ஜீனியாப் புகையிலைகளின் கலவைப் பலனாக தன்மையான புகைநயம்—அதுவே உங்கள் பனாமா !

2 நாடெங்கும் நல்லின்பம் பரப்பும் மக்கள் ரகமாகிய பனாமா ஒத்த இனத்திலே உன்னத விற்பனையுள்ள ரகமாகும்.

3 நாட்டின் பல பகுதிகளிலே தலைசிறந்த ரகமாகத் திகழுவதும் உங்கள் பனாமா.

4 இன்று மக்கள் மனங்கவர்ந்துள்ள இருபதடங்கிய உறையினைப் பல்லாண்டு களுக்கு முன் தோற்றுவித்த ரகமே பனாமாதான்.

உயரிய
பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும்
உகந்தது!
பனாமா

கோல்டன் டுபாக்கோ கம்பெனி பிரைவேட் லிட். பம்பாய்.58

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப்பெரியது

GT. (P) 633 A TH Greens' Advtg.



யார் சொன்னது?
நீங்கள் பேசாதிருங்களேன்.
என்னைத் தொட்டு விட்டீர்களா!
இன்னும் எதற்குச் சந்தேகம்?
நாங்கள் சினேகிதர்கள் பேசிக்கொண்டிருக்கக் கூடாதென்று எந்தச் சட்டம் சொல்கிறது.
ஆமாம், நீங்கள் யார்?
காரர்கள்தான். போலீஸ் உடையைப் பார்த்தால் தெரியவில்லையா?
போலீஸ் உடை! அது எனக்கு மறந்தே போய்விட்டது!
அட, அது எனக்குக் கூட மறந்து போய் விட்டது.


முடியாது, எனக்குக் கடமைதான் மூச்சு... இருந்தாலும் உன் வார்த்தையைத் தட்ட விரும்ப வில்லை. அவர்களிடமிருந்து அதைக் கொடுத்தாற்போதும்...
அது எங்கள் கடமை. எங்கள் மூச்சு. தயவு செய்து வாருங்கள், வாருங்கள். போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனால் தான் எனக்கு நல்ல தூக்கம் வரும்.
அதோ! தரையில் பச்சைப் பாம்பு, பாம்பு!
ஐயோ, பாம்பா!
அன்பார்ந்த நண்பர்களே! தயவுசெய்து போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடுங்கள்! ஓடுங்கள்!
(தொடரும்)



# கயல் விழி

### பதினேழாம் அத்தியாயம்

## கூண்டைச் சிதைத்த குயில்

விழுப்பரையர் இந்த வாழ்வில் பெற்ற அநுபவங்கள் அவருடைய ஐம்புலன்களைக் கட்டிக் காக்கவும் ஏற்ற வழியில் அவற்றைப் பயன்படுத்தவும் அவருக்குக் கற்றுக் கொடுத்திருந்தன. மலையே பெயர்ந்து வந்தாலும் மனம் பெயராதவர். எவ்வளவு துயரம் வந்தபோதும், சினமூட்டும் செயல்கள் நடந்த போதும், தமது உணர்ச்சிகளை அவர் சிதற விட மாட்டார். குரலில் இனிமையும் சொல்லில் சுருக்கமும் அவருடன் பிறந்த பண்புகள். நல்ல சொற்களையே பேசிப் பழகியவர் அவர்.

அவரே இன்று உணர்ச்சி வசப்பட்டு விட்டார். குலசேகர பாண்டியரிடம் அவர் புலவனுக்கு நேர்ந்த இன்னலைக் கூறியபோது அவர் விழிகளில் அருவி பெருக்கெடுத்தது. குலோத்துங்கரைச் சுடுசொற்களால் ஏசினார்.

''புலவர் பின்னால் நான் அனுப்பி வைத்த ஒற்றர்கள் வந்து கூறினார்கள். செய்திகளைக் கேட்ட பின்னர் என் உயிர் என்னிடம் இல்லை.'' விழுப்பரையரின் குரல் தழுதழுத்தது.

தம்முடைய மைந்தனைப் போரில் பறி கொடுத்தபோதுகூட இந்த அளவுக்குக் கலங்கவில்லையே இவர்?

''அரசே! என் மைந்தனுக்கும் மேலாக நான் அவரை என் உள்ளத்தில் வைத்துப் போற்றி வருகிறேன். எவ்வாறாயினும் அவர் சிறை மீள வேண்டும். அவர் சிறை மீண்டாலே என்னுடைய உயிர் மீளும்.''

குலசேகர பாண்டியர் தாமே ஓலைகளை எடுத்துத் தம் கரத்தாலேயே எழுதலானார். விழுப்பரையரின் துயரத்தை அவரால் தாங்க முடியவில்லை. குலோத்துங்கருக்கு உருக்கமான வேண்டுகோள் அந்த ஓலையில் இருந்தது.

முடிவாக அவர் குறிப்பிட்டிருந்தார்:

''சக்கரவர்த்திகளிடம் நான் தோல்வியுற்றபோதுகூட இந்த நாட்டின் ஆட்சிப் பொறுப்பை வேண்டிப் பெ[றவி]ல்லை. தியாகவிநோதராகிய தாங்கள் இதை எனக்கு அளித்துப் பெருமை த[ந்]தீர்கள். இப்போது என் நாட்டையே கேட்டுப் பெறாத நான் தங்களிடம் அந்த இளம் புலவரைத் திருப்பிக்



# அகிலன்

கேட்கிறேன். தாங்கள் வள்ளல்களுக்கெல்லாம் பெருவள்ளல். புலவர்களை ஆதரித்துக் காக்கும் புரவலர்களுக்குத் தாங்களே வழிகாட்டி. கடவுளையும் கவிஞனையும் ஒன்றாக மதிக்கும் நாட்டைச் சேர்ந்தவர்கள் நாம். தெய்வத்தின் சீற்றத்துக்குப் பாண்டிய நாடு இதனால் ஆளாகி விடுமோ என்று அஞ்சுகிறேன். ஏனெனில் நான்தான் அவரை அங்கு அனுப்பி வைத்தேன்.

''புலவர்களின் செருக்கு நம்மால் ஏற்றுக் கொள்ள முடியாததாக இருக்

கலாம். அதிலும் இவர் இளைஞர். தவறுகள் நேர்ந்திருக்காவிட்டால், தாங்கள் இந்தத் தண்டனை அளித்திருக்க மாட்டீர்கள். ஆனால் என் பொருட்டும், பாண்டிய நாட்டின் பொருட்டும் தாங்கள் அவரைத் திருப்பி அனுப்ப வேண்டுமென்று மன்றாடுகிறேன். குடி மக்களுக்கு இன்னும் செய்தி தெரியாது. தெரிந்தால் கூட்டமாகத் திரண்டெழுந்து தங்களிடம் விண்ணப்பிக்க வந்து விடுவார்கள். தங்களுடைய தியாகங்களிலெல்லாம் தலைசிறந்த தியாகமாக இது விளங்கட்டும்.''

விழுப்பரையரே அந்த ஓலையுடன் நேரில் சென்று குலோத்துங்கரைச் சந்திப்பதாக ஒப்புக் கொண்டார். அம்பலக்கூத்தன் அப்போது மதுரையில் இருந்ததால் அவன் வாயிலாகக் கயல்விழிக்குச் செய்தி அனுப்பினார். ''எப்படியும் அவர் விடுதலை பெற்றுவிடுவார் என்ற நம்பிக்கையிருக்கிறது. கயல்விழியிடம் கவலைப்படாதிருக்கும்படி நான் கூறினேனென்று சொல். இந்தச் செய்தி வேறு யாருக்குமே தெரிய வேண்டாம்.



பத்துத் தினங்களுக்குள் மதுரைக்குத் திரும்பி விடுவேன். வந்தவுடன் செய்தி அனுப்புகிறேன்.''

அம்பலக்கூத்தனை அனுப்பிய பின்னர்தான் விழுப்பரையருக்கே தம் தவறு புலப்பட்டது. கயல்விழியிடம் இதைத் தெரிவிக்காமலே இருந்திருக்கலாம். அவருடைய மனநிலை அளவுக்கு மீறிப் பாதிக்கப்பட்டிருப்பதை அப்போதுதான் அவர் அறிந்தார். மதுரையிலிருந்து கங்காபுரிக்குச் சென்றடையும் வரையிலும் அவர் மனம் அவரிடமில்லை. 'இளவரசே! இளவரசே!' என்று ஏங்கித் தவித்தது அவர் இதயம்.

குலோத்துங்கரைத் தனிமையில் கண்டு பேச வேண்டிய பணி விழுப்பரையருடையது. ஆகவே சபையில் அவரைச் சந்திக்காமல், அவர் பொழுதை அறிந்து அந்தரங்க மண்டபத்துக்குச் சென்றார். வெளிக் கூடத்தில் சிலர் காத்திருந்தனர்.

கண்டு பேசியவர்கள் ஒவ்வொருவராகத் திரும்பிக் கொண்டிருந்தனர்.

விழுப்பரையர் வந்திருக்கும் செய்தி எட்டியதும் அவசரமாக அவரை அழைத்து வரச் செய்தார் சக்கரவர்த்தி. சக்கரவர்த்திக்குச் சற்றுத் தொலைவில் சிறிதாக ஓர் ஆசனம் போடப்பட்டிருந்தது. ஓலையைப் பணிவுடன் குலோத்துங்கரிடம் கொடுத்துவிட்டு, அந்த ஆசனத்தில் அமர்ந்தார் விழுப்பரையர். சக்கரவர்த்தியின் முகம் வியப்புக் குறி காட்டியது. அப்படி ஒரு நிகழ்ச்சி அங்கு நடைபெற்றதே தமக்குத் தெரியாதது போலவும், பாண்டியரின் ஓலையைக் கண்டு அவர் திகைப்படைவது போலவும் நடந்து கொண்டார்.

''உண்மையாகவே அந்தப் புலவன் இப்போது சிறையிலிருக்கிறானா? நான் ஒன்றும் அப்படிக் கட்டளையிடவில்லையே! எப்படிப் பாண்டியருக்கு இந்தத் தவறான செய்தி எட்டியது?''

''புலவரின் மாணவன் ஒருவன் அவரைக் கண்டு பேச முயன்றிருக்கிறான். காவலர்கள் அவனைத் தடுத்துவிட்டார்களாம். இளவரசர் அவரைச் சிறையிட்டிருப்பதாகவும் யாரும் அவரைக் காண முடியாதென்றும் திருப்பி விட்டார்களாம்.''

விழுப்பரையரும் வேண்டுமென்றே தான் இப்படிக் கூறி வைத்தார். சக்கரவர்த்தியின் நெற்றி சுருங்கியது. இளவரசனிடம் காவலர்கள் கூடக் கட்டுப்படவில்லை. இரகசியங்களை அலட்சியமாக வெளியிடும் அளவுக்கு அவர்கள் அவனிடம் நடந்து கொள்கிறார்கள்.

''புலவனின் போக்கு எனக்கே சினமூட்டியது. என்றாலும் அவனுடைய அறியாமையை நான் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. ஆனால் அவன் இராஜராஜனின் மனத்தைப் பலர் முன்னிலையில் புண்படுத்தி விட்டான். அதற்காக இளவரசன் ஏதும் செய்திருக்கக் கூடுமென்று நினைக்கிறேன். எதற்கும் நான் தீர விசாரித்துப் பார்க்க வேண்டும்.''

''பாண்டியர் தங்களிடம் மிகவும் வேண்டிக் கொள்ள வேண்டுமென்று என்னைப் பணித்திருக்கிறார். குடிமக்களிடம் இன்னும் செய்தி பரவவில்லை.''

''அதிகாரிகள் விடுதியில் தங்கியிருங்கள். மீண்டும் நாளைக்குக் காலையில் என்னை வந்து சந்தித்தால் முடிவு சொல்கிறேன்'' என்று அவருக்கு விடை கொடுத்தார் சக்கரவர்த்தி.

சக்கரவர்த்தியின் அந்தரங்க விசாரணைகள் முடிந்தன. இரவில் உணவு முடிந்த பின்னர் இராஜராஜனைத் தம்மிடம் அழைத்தார் குலோத்துங்கர்.

''இன்று முடிக்க வேண்டிய செயலை நாளைக்கு முடிப்பது எப்படித் தவறாகுமோ அதே போல் நாளைக்கு முடிக்க வேண்டிய செயலில் இன்றே அவசரம் காட்டுவதும் தவறென்று உனக்குப் பன்முறை கூறியிருக்கிறேன். பொறுத்துச் செய்ய வேண்டியதைப் பொறுத்துச் செய்வதே நல்லது. அந்தப் புலவன் நம்மை விட்டு எங்கே ஓடிவிடப் போகிறான்?'' என்றார்.

''தங்களிடம் கூறி விட்டுத்தான்...''

''கூறிவிட்டுச் செய்யவில்லை; செய்து விட்டுக் கூறினாய்!'' என்று சீறினார் குலோத்துங்கர்.

''ஆனால் உன்னுடைய காவலர்கள் எந்த அளவுக்கு இரகசியம் காப்பாற்றுகிறார்கள், தெரியுமா? விருந்தினர்கள் இங்கு இருக்கும் வரையில் பொறுத்திருக்கும்படி கூறினேனே; கேட்டாயா? பாண்டிய நாட்டுக்கு உன்னுடைய இரகசியம் பறந்து போய், அங்கிருந்து எனக்கு ஓலை வந்து விட்டது.''

அவன் பதிலளிக்கவில்லை.

''பொழுது புலர்ந்தவுடன் அவனைச் சிறை மீட்க வேண்டும்!'' என்று உறுதியோடு கர்ஜித்தார் சக்கரவர்த்தி.

''சக்கரவர்த்திகளே!'' எனப் பதறினான் இளவரசன்.

''உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தினால் அதுவே சிந்தனை தரும். கட்டுப்படுத்தாத உணர்ச்சிகள் நிந்தனை தரும். உன் செயலால் இப்போது நிந்தனை வந்து விட்டது. பாண்டிய நாட்டிலிருந்து ஒரு கூட்டம் திரண்டு வந்து, அவனை விடுவிக்கும்படி குழப்பம் ஏற்படுத்தினால் எப்படியிருக்கும்? வீர நரசிம்மர் தான் நம்மையும் நம் ஆட்சியையும் பற்றி என்ன நினைப்பார்?''

''குற்றவாளி தண்டனை அடைந்திருக்கிறான்'' என்றான் இளவரசன்.

''அவனுடைய குற்றம் பெரிய குற்றம். அதற்கேற்ற தண்டனை இதுவல்ல. எதை எப்போது எப்படிச் செய்ய வேண்டுமென்று பிறகு முடிவு செய்வோம். காலையில் முதல் வேலையாக அவனை விடுவித்து என்னிடம் அனுப்பி வை. எனக்கு ஏதுமே தெரிந்ததாக இருக்கக் கூடாது!''

தனக்குள் முணுமுணுத்துக்கொண்டே வெளியேறினான் இராஜராஜன். அவனுடைய இந்தப் பணிவற்ற போக்குத்தான் குலோத்துங்கரை மிகவும் வருத்தியது. எண்ணம், சொல், செயல் எதிலுமே அவனுக்குப் பணிந்து பழகத் தெரியவில்லை.

✳ ✳ ✳ **பின்னியின்** தூய பட்டு பிரத்தியேக வகைகள் ✳ ரிவர்ஸிபிள், மற்றும் ஷாட் ஸில்க் புடவைகள் ✳ ஜார்ஜெட், ஷிப்பான், மேன்பட்டு தினுசுகள் ✳ கண்ணிய மான தோற்றமளிக்கும் தூய ஸில்க் ஷர்ட்டிங்

## வெங்கடேஷ் வஸ்திராலயா



மறு நாள் பொழுது புலர்வதற்கு முன்பே அந்த விருந்தினர் மாளிகையைச் சுற்றிலும் காவலர் கூட்டம் நிறைந்திருந்தது. பரபரப்பாக இருவர் இராஜ ராஜனை நோக்கி ஓடி வந்தார்கள். நடந்த நிகழ்ச்சியைச் சொல்வதற்கு அவர்களிடம் துணிவில்லை. காலைக் கதிரொளிக்காக மேல் மாடத்துக்கு வந்திருந்த பாமினியும் ஓட்டமும் நடையுமாக அந்த மாளிகையை நோக்கிச் சென்றாள்.

மாளிகைக் கதவு காவலர்களால் திறக்கப்பட்டிருந்தது. உள்ளே புலவனைக் காண வில்லை. மேல் சுவரின் அருகிலிருந்த பலகணியை ஒருவன் சுட்டிக் காட்டினான். அதன் வலிமை நிறைந்த இரும்புக் கம்பிகள் வளைக்கப்பட்டிருந்தன.

வீரர்கள் நால்வர் சேர்ந்து அடுத்த கம்பி ஒன்றை அசைத்துப் பார்த்தார்கள். அணுவளவும் அது அசைந்து கொடுக்க வில்லை. நால்வர் சேர்ந்து அசைக்கவும் முடியாத கம்பிகளை வளைத்துப் பாதை செய்து கொண்டு அவன் வெளித் தாழ்வாரத்தில் இறங்கியிருக்கிறான்! வியப்பும் திகைப்பும் ஒன்றையொன்று மிஞ்சும் உணர்வில் பாமினி வெளித் தாழ்வாரத்துக்கு வந்தாள். அங்கே அப்போதுதான் மயங்கிய நிலையிலிருந்து சுய உணர்வு பெற்றுக் கொண்டிருந்தான் ஒரு காவல் வீரன். அவனுடைய இடையில் புலவனின் உத்தரீயம் சுற்றப் பெற்றிருந்தது. அவனுடைய உடைகள் அவனிடமில்லை. வாயைச் சுற்றிக் கட்டப்பெற்றிருந்த துணியை முன்னதாகவே மற்றொரு வீரன் அவிழ்த்து விட்டிருந்தான்.

'எழுத்தாணி பிடித்த கை இரும்பையும் வளைத்திருக்கிறது! ஓர் இரும்பு மனிதனையும் விழ்த்தி யிருக்கிறது!' என்று தனக்குள் எண்ணிப் பூரிப்படைந்தாள் பாமினி.

உள்ளே ஓர் ஓலைத் துண்டு கிடந்தது. அதை எடுத்துப் படித்தாள் பாமினி. அதில் இந்தப் புலவன் எழுதியிருந்தான்: ''இளவரசே! கம்பரின் கவிச் செல்வமான ஓலைச் சுவடி தங்களிடம் செல்லரித்துப் போகும் நிலையில் இருப்பதைவிட என்னிடமிருந்தால், பயன் உண்டு. படிகள் எடுத்துக் கொண்டு எப்படியும் ஒரு நாள் அதைத் தங்களிடமே திருப்பிக் கொடுத்து விடுகிறேன். மிகவும் நன்றி.''

தனது நகைப்பை அடக்கிக்கொண்டே அந்த ஓலையை இராஜ ராஜனிடம் நீட்டினாள் பாமினி.

பதினெட்டாம் அத்தியாயம்

# புலி வெகுண்டது

குலோத்துங்க சோழரிடம் இராஜ ராஜன் வந்து பைந்தமிழ்க் குமரன் தப்பி ஓடிவிட்ட செய்தியைக் கூறிய போது தமது விழிகள் இரண்டும் தெறித்து விழத்தக்க முறையில் அவர் அவனைத் தம் விழிகளால் தாக்கினார். தாங்க முடியாத அவமானம் அவருக்கு. பொறுக்க முடியாத வேதனை.

''அரண்மனைக்குள்ளேயே உன் ஆணை இவ்வளவு அழகாக நிறைவேற்றப்படுமானால், நாளைக்கு இந்த சாம்ராஜ்யத்தை வைத்துக் கொண்டு, நீ என்ன செய்யப் போகிறாய்? நீயும் ஒரு தலைவன்தானா? எனக்குக் குமாரனாகப் பிறந்துவிட்ட ஒரே தகுதியைத் தவிர தலைவன் என்று கூறிக்கொள்ள உன்னிடம் என்ன லட்சணம் இருக்கிறது? உன் ஆசைப்படி ஒருவனுக்குத் தண்டனை அளித்தாய். அதையாவது முழுவதும் நிறைவேற்ற உன்னிடம் வலிமை இருந்ததா?''

குலோத்துங்கர் 'சாம, பேத, தான, தண்டம்' என்று சொல்லப்படுகிற நான்கு வழிகளிலும் தம்முடைய குமாரனை உருவாக்குவதற்கு முயற்சிகள் பல செய்து விட்டார். ஆனால் பாலை நிலத்தில் செந்நெல் தூவிப் பயன்? அவன் சாம்ராஜ்யத்தை நிர்வாகம் செய்யத் தெரியாமலே அதன் அதிகாரங்களில் ஆசை கொண்டான்; அதன் கடமைகளைக் கவனிக்காமலே அதன் சுக போகங்களைப் பற்றி மட்டிலும் மனப்பால் குடித்துக் கொண்டிருந்தான். விதியை நம்பும் நிலைமைக்கு வந்து விட்டார் தந்தை; மிஞ்சியது வெஞ்சினம் ஒன்றுதான்.

அப்போது அவருக்கு விழுப்பரையர் வந்து காத்துக் கொண்டிருக்கும் செய்தி எட்டியது. பற்றி எரியும் தீயில் நெடுந்தூரன். வெடித்துக் குமுறுவது போல் குமுறினார் அவர். காத்திருக்கும் விழுப்பரையரின் செவிகளுக்கும் தம்முடைய கட்டளைகள் எட்ட வேண்டும் என்று நினைத்தவரைப்போல் சோழ மண்டலாதிபதியான குலோத்துங்கர் கர்ஜனை செய்தார்.



"ஆகா! கழுத்திலே ஒரு வெட்டு. கன்னத்திலே ஒரு சுழுந்தி. இடுப்பிலே ஒரு வளைவு! பிரமாதம்; பிரமாதம்!"

"அப்போ, நடன அரங்கேற்றம் எப்போ வச்சுக்கலாம்?"

---

"இராஜ ராஜா! அந்தப் புலவன் எங்கு சென்றிருந்தாலும் அவனைப் பிடித்து வருவதற்கான எல்லா ஏற்பாடுகளையும் உடனடியாகச் செய்துவிடு. பாண்டிய நாட்டுக்குச் செல்லும் வழிகளிலெல்லாம் நம் வீரர்களின் கண்காணிப்பு மிருந்திருக்க வேண்டும். இதற்குள் அவன் நம்முடைய நகரத்தை விட்டு நெடுந் தொலைவுக்குச் சென்றிருக்க முடியாது. அவனை விலங்கிட்டு என் முன் கொண்டு வந்து சேர்க்க வேண்டியது உன் பொறுப்பு. ஆம், எந்த இடத்தில் கண்டாலும் கண்ட இடத்தில் அவனை விலங்கிட்டு இங்கு கொண்டு வர வேண்டும்!"

இளவரசன் செருக்கு நடையோடு வெளியில் வந்தான். கைகளிலும் கால்களிலும் அந்தப் புலவனுக்கு விலங்கிட்டு அழைத்து வரும் காட்சி அவன் மனத்தைக் குளிர வைத்தது.

விழுப்பரையரின் இருதயத் துடிப்பு நின்றுவிட்டது. மீண்டும் அதற்கு உயிர்ப்பூட்ட முயற்சி செய்துகொண்டே சக்கரவர்த்தியின் கூடத்துக்குள் நுழைந்து அவருக்கு வணக்கம் செலுத்தினார். சக்கரவர்த்தி அவரை ஏறிட்டுப் பார்க்கவுமில்லை; ஆசனத்தை அவருக்குச் சுட்டிக் காட்டவும் இல்லை.

"தியாக விநோதன் என்னும் பெயரை என் உபசாரங்களைப் பெற்றுக்கொண்டு எனக்கு அபசாரம் செய்கிறவர்களுக்காக நான் ஏற்றுக் கொள்ளவில்லை. அவர்களிடம் என்னால் கடுகளவும் கருணை காட்ட முடியாது."

நடப்புத் தெரியாமல் குழம்பினார் விழுப்பரையர். சக்கரவர்த்திகளிடம் கேட்கவும் துணிவில்லை.

"விசாரித்தேன்" என்று தொடங்கினார் குலோத்துங்கர். "அந்த இளைஞன் ராஜோபசாரங்களுடன்தான் எங்களது விருந்தினர் மாளிகையில் தங்கியிருக்கிறான். அவனது நடவடிக்கைகளில் ஐயம் ஏற்பட்டதால், அவனைக் கண்காணிப்பதற்காகச் சில காவலர்களை மட்டும் அனுப்பி யிருக்கிறான் இளவரசன். மற்றப்படி எந்தவித அசௌகரியங்களும் அவனுக்கு இங்கு ஏற்படவில்லை. இந்த நிலையில் எமது தாராள சிந்தனையையும் வள்ளல் தன்மையையும் பயன்படுத்திக் கொண்டு இந்த ஆட்சிக்கே இழுக்குத் தேடிவிட்டான் அவன். பலகணியை உடைத்துக்கொண்டு காவலன் ஒருவனைக் கட்டிப் போட்டுவிட்டு எங்கேயோ ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறான்."

வெண்ணெய் திரளும் சமயம் பார்த்துத் தாழி உடைந்து விட்டதே என்று மனம் உடைந்தார் விழுப்பரையர்.

"இன்று காலையில் அவனை உம்மிடம் சில நிபந்தனைகளுடன் ஒப்புவிக்கலாம் என்றுதான் எண்ணியிருந்தேன். இப்போதோ நீர் அவனை எம்மிடம் ஒப்புவித்துச் செல்ல வேண்டிய நிலையில் இருக்கிறீர்!" என்றார் சக்கரவர்த்தி. இளைஞனுக்குப் பதிலாக அந்த முதியவருக்கே தண்டனை கிடைத்துவிடும் போலிருந்தது.

"அந்தப் புலவனின் முகத்தைக் கூடப் பாண்டியர் கண்டதில்லை. தங்களது அழைப்பைக் கண்டவுடன் என்னைத்தான் புலவரிடம் அனுப்பி வைத்தார்கள். அந்த இளைஞரிடம் சிறுபொழுது பேசியபோதே, சக்கரவர்த்திகளின் அன்புக்கும் அழைப்புக்கும் இவர் ஏற்றவர்தானா என்ற ஐயம் எனக்கு எழுந்தது. இப்படி ஏதும் நேர்ந்தால் அது புலவரை மட்டும் பாதிக்காதே? சக்கரவர்த்திகளின் அன்பு பாண்டிய நாட்டுக்கு தேவையல்லவா?"

குலோத்துங்கரின் சினம் சிறிது தணிந்தது. அதைக் கவனித்த விழுப்பரையர் மேலும் கூறினார்: "புலவரை இங்கு அனுப்புவது உசிதமல்ல என்றுதான் எனக்குத் தோன்றியது. ஆனால் சக்கரவர்த்திகளின் கட்டளையை நிறைவேற்ற வேண்டுமே என்ற ஆர்வத்தால் அந்தத் தவறைச் செய்துவிட்டோம். அந்த இளைஞரோ உறவை வளர்ப்பதற்கு மாறாக, அதைக் குறைப்பதற்கு வழி கோலிவிட்டார். சக்கரவர்த்திகள் மன்னித்தருள வேண்டும்"

என்று இறைஞ்சினார் அவர். தூதுவருக்கு இருக்க வேண்டிய இராஜ தந்திரங்களில் ஊறிப் பழுத்த பழம் விழுப்பரையர்.

''அவனுக்கு இனி மன்னிப்பே கிடையாது!'' என்றார் சக்கரவர்த்தி. ''அவன் புலவனாக நடந்து கொண்டிருந்தால் நாம் புரவலனாகவோ வள்ளலாகவோ அவனை நடத்தலாம். இப்போது அவன் அரசின் ஆணையை மீறிய குற்றவாளி. பாண்டி நாட்டிற்குள் அவன் நுழைந்தால் அவனை உடனே சிறை செய்து நீங்கள் இங்கு அனுப்பி வைக்க வேண்டும். — இது குலோத்துங்க சக்கரவர்த்தி தமது சிற்றரசர் குலசேகர பாண்டியருக்கு இடும் கட்டளை!''

நடுக்கம் ஏற்பட்டது விழுப்பரையருக்கு. ''சக்கரவர்த்திகளின் ஆணையை அரசருக்கு அறிவிக்கிறேன்.''

''ஆமாம்; மதுரையைப் புதுப்பிக்க அவன் பொருள் திரட்டித் தந்ததால் அவன் மீது ஏதும் பரிவு காட்டுவீர்களானால், அந்த நகரம் இனி புதுப்பிக்கவே முடியாத நிலையை அடைந்து விடும். இது உங்கள் பாண்டியரின் நினைவில் இருக்கட்டும்.''

''சித்தம் சக்கரவர்த்திகளே!''

''மற்றொன்று....'' என்று கூறித் தயங்கிவிட்டு, ''இந்தப் புலவனைக் கைப்பற்றுவது சம்பந்தமாக அமைச்சர் சயங்கொண்ட வல்லபருக்கு நான் தனி அதிகாரம் வழங்குகிறேன்; இது பற்றிய திருமந்திர ஓலைகள் விரைவில் தங்களிடம் கிடைக்கும்; பெற்றுக் கொண்டு நீங்கள் மதுரைக்குத் திரும்பலாம்'' என்று முடித்தார் குலோத்துங்கர். தம் கரத்தை அசைத்து அலட்சியமாக விடை கொடுத்தார்.

திருமந்திர ஓலைகளைப் பெற்றுக் கொண்டு மௌனமாக அரண்மனையிலிருந்து வெளி நடந்தார். அவரைப் பின்பற்றி ஓர் ஒற்றன் நிழல் போல் தொடர்வதை அவரால் அறியமுடிந்தது. ஆகவே இனி அவர் கங்காபுரியில் தங்க முடியாது. பைந்தமிழ்க் குமரனைத் தேடிப் பார்க்க முடியாது. ஒருவேளை தேடிக் காண முடிந்தாலும் அது அவனைக் காட்டிக் கொடுக்கதற்கு ஒப்பாகும். காவலர்கள் அவனை விலங்கிட்டு அழைத்துச் செல்வதற்கு அவர் துணை செய்ய விரும்பவில்லை. ரதத்தைப் பூட்டச் சொல்லி ஏறி அமர்ந்தார். சாரதி முன்புறமும், அவரது பணியாள் பின்புறமும் உட்கார்ந்தார்கள். நெடுஞ்சாலையில் ரதம் விரைந்தது.

நகர எல்லைக்கு வெளிப்புறம் வந்தவுடன் ரதத்தை நிறுத்தச் செய்தார் விழுப்பரையர். ஒற்றனுக்குப் போக்குக் காட்டிவிட்டதால் இனி ஐயம் ஏற்பட வழியில்லை. பணியாளனைத் தனியே அழைத்தார்.

''முருகா! நவரத்தின அங்காடித் தெருவில் நம்முடைய பாண்டிய நாட்டு முத்து வணிகர் தில்லைநாதர் இருக்கிறார். அவரிடம் நீ இந்த ஓலையைக் கொடுத்துவிட்டு, அவர் இல்லத்திலோ அங்காடியிலோ பணியாற்று. நம்முடைய புலவரைப் பற்றிய தகவல்களை அறிந்து கொள்வதற்காகவே நீ இங்கு தங்குகிறாய். தில்லை நாதரும் இயன்ற வரையில் உனக்குத் துணை செய்வார். ஏதும் தகவல் கிடைத்தால் அவரிடம் குதிரை பெற்றுக் கொண்டு நீ மதுரைக்கு வந்துவிடு.''

முருகன் திரும்பிச் சென்றான். ரதம் மெதுவாகவே பாண்டிய நாட்டுச் சாலையில் ஊர்ந்தது.

நம்பிக்கை நிறைந்த ஓலையைச் சுமந்து கொண்டு அவர் சோழ நாட்டுக்குச் சென்றபோதே அவர் தம்மைத் தேற்றிக்கொள்ள இயலாது தவித்தார். இப்போது அவரிடம் இருந்த ஓலைகளோ அவனைக் கண்டவிடத்தில் சிறைப்படுத்தக் கூடிய கட்டளைகள். பாண்டியரிடமே நம்பிக்கை இல்லாது அந்த அதிகாரத்தை அமைச்சருக்கு வழங்கிவிட்டார் குலோத்துங்கர்.

மதுரைக்குள் நுழைந்தவுடன் நேரே அரண்மனைக்குச் சென்று பாண்டியரிடம் ஓலைகளைக் கொடுத்தார். நடந்தவற்றைக் கூறினார். தேம்பித் தேம்பி அழுதார். தம் துயரம் தீர மன்னரிடம் கண்ணீரைக் கொட்டிவிட்டுத் தம் இல்லத்துக்குத் திரும்பினார்.

மாளிகைக்குள் நுழைந்ததும் நுழையாததுமாகக் கயல்விழி உள்ளேயிருந்து ஓடிவந்தாள். விழுப்பரையரோடு இளைஞன் வருகிறானா என்று ஆவலுடன் பார்த்தாள்.

''புலவர் நலமாக இருக்கிறாரா?— அழைத்து வந்து விட்டீர்களா?''

விழுப்பரையரின் உதடுகள் நடுங்கின. அவருக்குத் தொண்டையை அடைத்துக் கொண்டது. கயல்விழி நின்றவள் நின்றவாறே மூர்ச்சித்துத் தரையில் விழுந்தாள். உய்யவந்தாள் ஓடிவந்து அவள் தலையைத் தன் மடிமீது கிடத்திக்கொண்டு முகத்தில் நீர் தெளித்தாள். ''இன்னும் அவர் வரவில்லையா?'' என்று மீண்டும் கேட்ட கயல்விழியின் கருவிழிகள் அவளுடைய இமைகளில் செருகிக் கொண்டன. **(தொடரும்)**

காலம் பறக்கிறது...ஆயினும் அவள் எழில் நிலைக்கிறது




கண்டான், கண்டதும்
மையல் கொண்டான். அவளு
டைய பேரெழில் அவனை மயக்கிற்று.
காதல் கடிமணம் நடந்தது. ஆண்டுகள்
இருபது ஆகிவிட்டன. ஆனாலென்ன? அன்று
முதல் தடவையாக அவனைக் கண்ட காட்சி அவள்
நினைவில் பசுமையாக நிலைத்துவிட்டது. அவள்
எழிலோ இன்னும் ஒளி குன்றாது சுடர் விடுகிறது. தன்
நாயகன் போற்றும் தனது அழகுப் பராமரிப்புக்கு
அவள் உபயோகிப்பது "'ஹேஸலின்' ஸ்னோ"...
தனியாகவோ, பவுடர் படியும் தளமாகவோ எழிலுக்கு
மெருகூட்டிப் பாதுகாக்கிறது "'ஹேஸலின்' ஸ்னோ".
'ஹேஸலின்' ஸ்னோ
உங்களுக்கு எழிலூட்டுகிறது.
'ஹேஸலின்' வரிசையில் மேலும் கிடைப்பவை கோல்ட் க்ரீம், டால்கம்
பர்ரோஸ் வெல்கம் & கம்பெனி
(இந்தியா) ப்ரைவேட் லிட்.
த. பெ. தெ. 290, பம்பாய்-1



# நான் கண்ட

தண்டகாரண்யம் என்ற பெயரைக் கேட்டவுடனேயே என் மனத்தில் தோன்றிய முதல் எண்ணம் ஸ்ரீராமனும், இராமாயணத்தைக் காவியமாக, அழியாச் சொல் ஓவியமாகப் படைத்த கம்பனும்தான்.

ஆரண்ய காண்டத்தில், ''ஓங்கும் மரன் ஓங்கி, மலை ஓங்கி, மணல் ஓங்கிப் பூங்குலை குலாவு குளிர் சோலை புடை விம்மி......'' என்றெல்லாம் கம்பன் ஓவியமாக வர்ணித்த வனத்தின் அழகை மனத்தில் நினைத்துக் கொண்டே, என் கணவருடன் இன்றைக்குச் சரியாக ஒரு வருடத்துக்கு முன் தண்டகாரண்யத்தை வந்தடைந்தேன்.

ராயகடா என்ற ஒரு சிறு ஊரை ரயில் மூலம் வந்தடைந்து, பின் காரில் கோராபுட் என்ற ''தண்டகாரண்யா அபிவிருத்தி அதாரிட்டி''யின் தலைநகருக்கு வந்தோம். வரும் வழியெல்லாம் மலையும், சோலையும் சலசலக்கும் ஓடையும் மனத்தில் ஒருவித அமைதியையும் கண்ணுக்கொரு விருந்தையும் கொடுத்தன. இத்துணை அழகிய இயற்கை வனப்பு இராமனைக் கவர்ந்து பதின்மூன்றாண்டு இன்பமாக வாழ விட்டதில் அதிசயப்படுவதற்கு இல்லை. எவ்விடத்திலுமே காணாத, கிடைக்க முடியாத ஒருவித சாந்தி எனக்கு இங்கு ஏற்பட்டது.

இங்கு வருவதற்கு முன் பலர் தண்டகாரண்யத்துக்குப் போக வேண்டாமெனப் பல காரணங்கள் கூறித் தடுத்தனர். ஆனால் வந்தடைந்த சில மணி நேரத்துக்குள் தண்டகாரண்யம் எங்கள் மனத்தைக் கவர்ந்து சொல்லொணா இன்பத்தைக் கொடுத்தது.

கிழக்குப் பாகிஸ்தானில் மதவெறி காரணமாக, நாடு நகரம், வீடு வாசல் எல்லாம் இழந்து அநாதரவாகத் துரத்தியடிக்கப்பட்டு அல்லல்படும் அகதிகளாகத் தாய் நாட்டைத் தஞ்சமென வந்தடைந்த வங்காள ஏழை எளிய மக்களுக்குப் புனர் வாழ்வளிக்கும் நன் நோக்கத்துடன் ஏற்பட்ட ஸ்தாபனமே இத்தண்டகாரண்யா அபிவிருத்தி 'அதாரிட்டி'. இத்தகைய ஒரு நற்பணி புரியும் ஸ்தாபனத்தில் என் கணவர் பணி புரியும் வாய்ப்புக் கிடைத்ததும் அதை நேரில் கண்டு அறியும் பேறு கிடைத்ததும் என் பாக்கியமே.

அகதிகள் பதிவு செய்யப்பட்டு, மருத்துவ வைத்தியர்களால் பரிசோதிக்கப்படுகிறார்கள். உடல் நலம் குன்றியவர்களுக்கு வைத்திய சிகிச்சை தரப்படுகிறது. பிறகு இவர்கள் குடும்பம், குடும்பமாக நெடுஞ் சாலையோரங்களில் கட்டப்பட்டிருக்கும் பணிமனை (வொர்க் செண்டர்)களில் சில மாதங்கள் தங்குகிறார்கள். புது கிராமம் சென்று பயிர் செய்து தாமாகவே வாழ்க்கை தொடங்கும் வரையில், ஒவ்வொரு குடும்பத்துக்கும் அறுபது ரூபாய் தரப்படுகிறது.

டிராக்டர், புல்டோஸர் போன்ற மிகப் பெரிய பெரிய இயந்திரங்களின் உதவியால் காடு அழிக்கப்பட்டுப் பூமி சமதளமாக்கப்படுகிறது. இதன்பின் பூமியில் பல இடங்களில் மண் தோண்டி எடுக்கப்பட்டு விளைச்சலுக்கு ஏற்ப இருக்கிறதா என்று பரிசோதிக்கப்படுகிறது. இதன் பின் பூமியில் பல இடங்களில் இவற்றை எல்லாம் நன்கு அறிந்தபின் தண்ணீர் வசதி எங்கு அதிகமாக உள்ளதோ அந்தப் பிரதேசம் தேர்ந்தெடுக்கப்படுகிறது. பிறகு கிராமங்கள் ஏற்படுத்தப்படுகின்றன. இது வரை உமர்கோட், பரல்கோட், மல்காங்கிரி என்று மூன்று மாவட்டங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு மாவட்டத்தையும் ஆள ஏனைய இலாகாக்கள் உள்ளன. ஒவ்வொரு மாவட்டத்திலும் ஏறக்குறைய நாற்பது முதல் ஐம்பது கிராமங்கள் உண்டு. ஒவ்வொரு கிராமத்திலும் நாற்பது முதல் ஐம்பது குடும்பங்கள் உள்ளன. ஒவ்வொரு குடும்பத்துக்கும் ஏழு ஏக்கரா நிலம் பயிரிடுவதற்குத் தரப்படுகிறது. அகதிகளுக்கு உரம், நல்ல விதை, ஒரு ஜோடிக் காளை எல்லாம் வழங்கி நவீன ஜப்பானிய முறையில் பயிரிடுவது எப்படி என்றெல்லாம் கற்பிக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு குடும்பத்துக்கும் வீடு அமைத்துக் கொள்ள இடமளிக்கப்படுவதுடன் அதற்கு வேண்டிய பொருள்களும் தரப்படுகின்றன. வீட்-





# தண்டகாரண்யம்

கிரிஜா சுப்பிரமணியம்

டச் சுற்றிச் சிறு தோட்டம், மாடு கட்டத் தாழ்வாம் எல்லாம் உள்ளன. இவ்வகுதியின் வீடுகளிலெல்லாம் பப்பாளிப் பழ ரமும் பயிரிடப்பட்டிருப்பதைக் கண்டேன். ங்கள் தங்கள் வீடுகளுக்கு வேண்டிய காய் றிகளை வீட்டின் பின்புறத்தில் பயிரிட்டுக் காள்கிறார்கள். ஒவ்வொரு கிராமத்திலும் ல்ல குளமும், இரண்டு பெரிய கிணறுகளும், ரண்டு ஆழ்குழாய்க் கிணறுகளும் இருக் ன்றன. வைத்திய வசதியும், இலவசக் ல்வி வசதியும் அளிக்கப்படுகின்றன. ஒவ் வாரு மாவட்டத்திலும் சிறு தொழில் சய்ய வசதிகள் உள்ளன.

இத்தகைய அழகிய, சுத்தமான, ராமங்களை நம் நாட்டில் வேறு எங்குமே ாண்பது அரிது. இப்பிரதேசத்தில் நாகரிகம் க முடியாத இடங்களில் ஆதிவாசிகள் ன்ற பழங்குடி மக்கள் ஆதிகாலம் தொட்டு ாழ்ந்து வருகிறார்கள்.

தண்டகாரண்யத்துக்கு வந்தவுடனேயே வர்கள் எங்கள் மனத்தைக் கவர்ந்து ிட்டார்கள். வஞ்சமும் சூதும் அறியாது ள்ளங்கபடமின்றி இயற்கையோடு வாழ்ந்து ரும் இம்மக்கள் பாரத பழங்குடிமக்களாவர். நாய் நொடியின்றி அவர்கள் தலை நிமிர்ந்து ட்டம் கூட்டமாக மாலை வேளைகளில் விடு ரும்பும் காட்சி நம் மனத்தில் ன்றும் நிலைபெற்று விடுகிறது. வர்கள் விரும்பி அணியும் நிறம் ஞ்சளும் நன்வெப்பும்தான். ந்சில இடங்களில் தூய வெண் மையும் உடுத்துகிறார்கள். நல்ல ட்டுமஸ்தான தேகம், சளியாத ழைப்பாளிகள். பெண்கள் எப் பாழுதும் தலை சீவிப் பூ முடித்து வள்ளியிலும் செய்த பலவித பரணங்களைக் கை, கழுத்து, ால்களில் அணிகிறார்கள். வர்கள் மத்தளம் உடுக்கை பான்ற வாத்தியங்களைப் பெரி ும் விரும்பி உபயோகிக்கிறார் ள். கடுமையாக உழைக்கும் பாது கூட மென்மையாகப் ாடிக் கொண்டே வேலையின் ுமையைக் குறைத்துக் கொள் ிறார்கள். மாலை வேளைகளிலும், மற்றும் விசேஷ தினங்களிலும் எல்லோரும் ஒன்றாகக் கூடி மிக அழகாக நடனமாடுகிறார்கள். அவர்களின் கைவளையல்களின் ஒலியும் பாத அணிகளின் ஒலியும் சேர்ந்து நடனத்துக்கு ஒரு தனி அழகை அளிக்கின்றன. ஆண்கள் அழகிய மணிகளைக் கழுத்தில் அணிந்து தாள வாத்தியங்களை முழங்கிப் பாட அதற்கிசைந்து பெண்கள் ஒரு வரிசையாக நின்று ஒருவரையொருவர் அணைத்துக் குனிந்து நிமிர்ந்து நடனமாடும் காட்சி யாவர் மனத்தையும் கவர்ந்து விடும்.

இம்மக்கள் தங்களுக்கு வேண்டிய அன்றாடச் சாமான்களை வாரம் ஒரு முறை கூடும் சந்தைகளுக்குச் சென்று வாங்கிக் கொள்கிறார்கள். இதற்கு 'மடாய்' என்று பெயர். இது பார்ப்பதற்கு ஒரு சிறு பொருட்காட்சி போலிருக்கிறது. இங்கு இரவு வேளைகளில் இம்மக்கள் தங்களை மறந்து மிக அழகாக நடனமாடுகிறார்கள். தண்டகாரண்யத்தில் சிறுத்தை, புலி, காட்டுப் பன்றி போன்ற துஷ்ட மிருகங்கள் நிறைய இருக்கின்றன. ஆனால் மனித சஞ்சாரம் அதிகமாகிக் கொண்டு வருகின்றதால் இவை மிக அடர்ந்த காடுகளுக்குச் சென்று விட்டன.

அநேகமாக அகதிகளின் கிராமங்கள் இவ்வாதிவாசிகளின் கிராமங்களுக்கு அருகில் தான் அமைகின்றன. அன்னிய மொழி பேசி வேறுவிதப் பழக்க வழக்கங்களோடு முற்றிலும் புதிய மக்கள் தங்களருகில் வாழ வருவதை இம்மக்கள் மிக அன்புடன் வரவேற்கிறார்கள். இவர்கள் மனமுவந்து தங்களால்





## விசித்திரப் பெட்டி

சாமா

"என்ன ஆடாரே! தழைகளை மேய்ந்து ஒய்ந்தீரா?"

"அதெப்படி ஒய்வது? இந்த உலகத்திலே இருக்கிற தழை அத்தனையையும் தின்று முடித்த பிறகுதானய்யா ஒய்வு?"

"அதெப்படி ஒயாமல் தழை மேய்கிறீர்கள்?"

"நீங்க ஒண்ணு. ஆடு தோடா இலென்று எவன் பெயர் வைச்சானோ தெரியவில்லே.... அதையும் நாங்கள் சாப்பிடும்படியா இருக்கக் கூடாதான்னுதான் நாங்க நினைக்கிறோம்."

"ஆட்டின் பால் ரொம்ப விசேஷம்; உடம்புக்கு நல்லதுன்னு சொல்றாங்களே!"

"ஆமாம்! அப்படி விசேஷமா இருக்கத்தான் நாங்க பலவித பச்சிலைகளைச் சாப்பிடுகிறோம்."

"அப்படி எங்க மேலே அவ்வளவு பிரத்தையா யிருக்கிற உங்களையே சிலபேர் தின்றுடறாங்களே!"

"அதென்னமோ, போங்க! அந்த ருசி அவங்களுக்குத்தான் தெரியும். நாங்க சுத்த சைவம்!"

"ஆமாம்! ஆட்டுக்கு வால் அளந்து வைச்சான் என்ற பழமொழியைக் கேட்டிருக்கீங்களா?"

"ஏன் கேள்விப்படணும்? பின்னாலே பாருங்க. அளந்துதானே வைச்சிருக்கிறான்?"

"அளந்து வைச்சான் என்ற பழமொழி ஏன் வந்ததோ, தெரியல்லியே!"

"அளந்து வச்சவனைத்தான் கேட்கவேண்டும்."

"ஹி! ஹி!.... பேஷ்! நீங்கள் ரொம்பவும் தமாஷாகப் பேசுகிறீர்களே! ஆட்டுக்குப் புத்தி மட்டு. மண்டுகளைப் பற்றிப் பேசும் போது ஏன் ஆடுமாதிரி இருக்கேன்னு சொல்லுவாங்க. அறிவுக்கும் நன்றிக்கும் நாயை உதாரணமாகச் சொல்லுவாங்க!"

"சரி! ரோட்டில் குறுக்கே நாங்களும் போகிறோம். நாய்களும்தான் போகின்றன. நாங்கள் காரில் அடிபட்டு இறந்தோம்னு எங்காவது கேள்விப்பட்டிருக்கிறீர்களா?"

"இல்லவேயில்லை. நாய்கள்தான் சாகின்றன."

"அதிலிருந்து புத்திசாலிகளின் கதியைப் பற்றி உமக்கு ஒருவாறு புரிந்திருக்கும்!"

"காந்திஜியைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கேளா?"

"கேள்விப்பட்டிருக்கேளாவாவது...? அவருக்கு எங்களிடம் ரொம்பப் பிரியமாச்சே! அவர் தினமும் சாப்பிடுவது ஆட்டுப்பால்தான். சமாதானத்தையும் எளிமையையும் விரும்பியவர். ஆடுகளையே ஏழையின் நண்பன், எளிமையின் சின்னம் என்று கருதினார் அவர்!"

"ரொம்ப சரி! சற்று முன் புத்திசாலி யார் என்ற ஆராய்ச்சியில் மூழ்கிப்போனேனே! அது எவ்வளவு தப்பு என்று புரிகிறது. ஏழைக்குத் தோழனாகவும், எளிமைக்குச் சின்னமாகவும் உங்களைப் பின்பற்ற நான் ஆசைப்படுகிறேன்!"

"அவசரப்படாதேய்யா! அப்புறம் ஆட்டு மந்தையில் நீரும் ஒருவராகச் சேர்ந்துவிட்டீர் என்று உங்களை எல்லோரும் பரிகசிப்பார்கள்."

"எல்லோரும் என்னும் போதே.... அவர்களும் ஒரு மந்தைதானய்யா.....!"

"ஹஹ்ஹ... ....ஹா....!"

இயன்ற உதவிகளையும் தயங்காது அகதிகளுக்கு அளிக்கிறார்கள். வீடு கட்டுவது முதல் நிலத்தில் உழுது பயிரிடுவது வரை அகதிகளுக்கு எல்லா உதவிகளையும் அளிக்கிறார்கள். பண்டமாற்றுதல்கூட நடைபெறுகிறது.

தண்டகாரண்யத்தில் ரயில் போக்குவரத்து ஒரு வருடத்துக்குள் வந்து விடும். பைல்லடில்லா என்னும் இடத்தில் பெரிய இரும்புக் கனி இருப்பது கண்டுபிடிக்கப்பட்டு ஒரு பெரிய திட்டம் தொடங்கியிருக்கிறது.

நீர்ப் பாசன வசதிக் குறைவாகையால் இதனைச் சமாளிக்க உமர்கோட் அணை, பக்கஞ்சோர் அணை போன்ற பெரிய அணைகள் கட்டி முடியும் தறுவாயில் இருக்கின்றன. இவற்றைத் தவிர சில பெரிய தொழிற்சாலைகளும் தொடங்கப்படும். கோராபுட் அருகில் ஏழு மைல் தூரத்தில் பெரிய விமான இஞ்சின் தொழிற்சாலையான எம். ஐ. ஜி.யும் முன்னேறி வருகிறது.

உமர்கோட், பரல் கோட் முதலிய மாவட்டங்களில் ஆயிரம் ஏக்கர் கொண்ட கலப்புப் பண்ணை அரசாங்கத்தால் நடத்தப்பட்டு வருகிறது. இங்கு விவசாய அபிவிருத்திக்கான பலவிதப் பயிர்கள் பயிராகி வருவதுடன் அகதிகளுக்குப் பெருமளவில் உபயோகமாகவும் அமைந்திருக்கிறது. பெரிய கோழிப் பண்ணைகளும் அகதிகளின் நன்மைக்காக நடத்தப்படுகின்றன. சில குடும்பங்கள் இந்தப் பண்ணைகளிலிருந்து ஆரோக்கியமுள்ள உயர் ரகக் கோழிகளை மிக மலிவான விலைக்குப் பெற்றுத் தங்கள் வீடுகளில் சிறு அளவில் ஒரு பண்ணை நடத்துகிறார்கள்.

எவ்வளவு முன்னேறிக் கொண்டு வந்தாலும் ஆரண்யத்தின் இயற்கை எழிலும் வனப்பும் குறையாது. உதாரணமாக, ஜகதல்பூர் என்ற ஊரின் அருகில் உள்ள சித்திரகூடம் என்ற இடத்தில் அழகிய அருவி இருக்கிறது. தமிழ் நாட்டில் உள்ள குற்றாலம்போல் அத்தனை அழகாய் அமைந்துள்ளது. இவ் வருவியிலிருந்து வெகு விரைவில் மின்சாரம் எடுக்கும் பணி தொடங்கப் போகிறது.

இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் "மானா"வில் ஒன்பதினாயிரம் 'பாஷா' எனப்படும் சிறு வீடுகள் தயாராகிப் பல்லாயிரக் கணக்கில் தாயகம் வரும் அகதிகளுக்கு இடமளிக்கவும் ஏற்பாடாகி வருகிறது.

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான

# ஹெடன்ஸா

உபயோகித்து
நிவாரணம் அடையுங்கள்

—ரண சிகிச்சையையும்
தடுங்கள்

பொறுக்க முடியாத வலியா? தாங்க முடியாத அரிப்பா? எரிச்சலெடுக்கும் உணர்ச்சியா? ரத்தக் கசிவா? உடனடியாக சிகிச்சை செய்யத் தாமதியாதீர்கள்! அலட்சியம் செய்தால், நோய் முற்றி ரணசிகிச்சை செய்ய வேண்டிவரும். 108 தேசங்களிலுள்ள டாக்டர்களால் சிபாரிசு செய்யப்பட்ட, நம்பிக்கையான ஜெர்மன் மூலநோய் களிம்பு ஹெடன்ஸா உபயோகித்து இப்பொழுதே நிவாரணம் பெறுங்கள்! ஹெடன்ஸா வலியையும் அரிப்பையும் சீக்கிரம் நிறுத்தி, மலப் பிரவிருத்தியைச் சுலபமாக கஷ்டமில்லாமல் செய்கிறது. முக்கியமாக, ஹெடன்ஸாவிலுள்ள சக்திவாய்ந்த மருந்துப் பொருள்கள் நீடித்த நிவாரணமளிப்பதோடு, வெடிப்புகளைச் சுருங்கச் செய்து, ஆரோக்கியமான தசைகளை வளர்க்கிறது. மூலநோய்க்குக் காலாகாலத்தில் ஹெடன்ஸா உபயோகித்தால் பிற்காலத்தில் ரணசிகிச்சை செய்யவேண்டிய நிலை ஏற்படாது என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஹெடன்ஸாவில் உணர்வழிக்கும் மருந்துகள் ஒன்றும் கிடையாது.

ஒரிஜினல் ஜெர்மன் முறைப்படி
இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

## தி டாலர் கம்பெனி

337, தம்பு செட்டி தெரு
சென்னை-1

பிரபல மருந்து வியாபாரிகளிடம்
கிடைக்கும்.

83-DOL-2 A TM

புதுமையிலும், தரத்திலும்
மாதிரிகளிலும்
சிகரற்று விளங்கும்
தாரகராம் ஸில்க் ஹவுஸின்
1964 தீபாவளி புது
தயாரிப்புகள்

காஞ்சி பட்டில்:

- ரத்னஹார்
- தீபக்
- ராஜ்ஹம்ஸ
- பிரியதர்சினி
- அப்சரா
- ஃபெரிக்வீன்

பின்னி மென்பட்டில்:

- சங்கு

புதிய கலர்கள்:

- ஸில்விகாட்
- மைஸோ
- சந்தன்

# தாரகராம் ஸில்க் ஹவுஸ்

சத்யமூர்த்தி ரோடு
கோயமுத்தூர்-9
போன்: 2871

# 13. இந்தியா என்ற இந்திரஜாலம்

# பாமினிப் பாவை

## கௌசிகன்

கப்பலில் இருந்தவர்களின் நினைவிலெல்லாம் நிறைந்திருந்தான் யூசப்கான். வியப்பு வழியும் கண்களால் நன்றிப் பெருக்கோடு அவனைப் பார்த்தார்கள் போர்த்துகீசியர்கள். தங்களால் உதாசீனப்படுத்தப்பட்ட ஒருவன், மரணக் கம்பத்திலே மாட்டி வைத்து உயிர் துடிக்கத் துடிக்கத் தங்களிடம் கசையடி வாங்கிய ஒருவன், அதை எல்லாம் மறந்து மன்னித்துத் தங்கள் உயிர்களையும் உடைமைகளையும் கொள்ளைக்காரர்களிடமிருந்து காப்பாற்றிக் கொடுத்ததை நினைத்தபோது அந்த அந்நியனை யூசப்கான், அதிசய மனிதனுகத்தான் அந்த மாலுமிகளின் இதயங்களிலே இடம் பெற்றிருந்தான்.

கப்பலின் தலைவர் அவனைத் தம் அறையிலேயே தங்கச் செய்தார். யாருக்குமே கிடைக்காத தனிச் சலுகை இது. தம்முடனேயே தமக்குச் சமமாக ஒரே ஆசனத்தில் அமர்ந்திக் கொண்டு உணவருந்தினுர். வெற்றுடம்போடு வியர்வை கொட்ட வேலை வாங்கிய அடிமை யூசப்கானு இப்போது அவன்? அந்தக் கப்பலுக்கும் அதிலிருந்தோருக்கும் மறு வாழ்வளித்த மகத்தான வீர புருஷனல்லவா? விரட்டி விரட்டி வேலை வாங்கியவர்கள் விழுந்து விழுந்து உபசரித்தார்கள். இன்னும் எப்படியெல்லாம் தம் நன்றியை, நல்லெண்ணத்தைக் காட்டுவது என்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்தார் கப்பல் தலைவர்.

வழுவழுப்பான தரையிலே வழுக்கிச் செல்லும் பொருளைப் போலத் தகதகக்கும் கடல் நீர்ப் பரப்பிலே அன்னமென ஆடி அசைந்தபடி ஆனந்தமாக மிதந்து கொண்டிருந்தது கப்பல். கலத்தைச் செலுத்துவதற்கு ஏற்ற வசதியான காற்று வீசிக் கொண்டிருந்தது. கப்பலுக்கு மட்டுந்தானு? யூசப்கானின் வாழ்க்கையிலும் இப்போது வசதியான காற்றுத்தான் வீசிக் கொண்டிருந்தது! கப்பலில் உள்ளோருக்கு முடி திருத்தும் மாலுமி ஒருவன் யூசப்கானின் முகத்து இளந்தாடியைக் கத்திரித்து அழகுபடுத்தும் பணியில் ஈடுபட்டிருந்தான். அந்த நிலையிலும் கூட அவன் அருகே ஓர் ஆசனத்தில் அமர்ந்து சிரித்தபடி உரையாடிக் கொண்டிருந்தார்



கப்பல் தலைவர். மற்றவர்கள் பொறாமை கொள்ளுமளவுக்கு அவர் யூசப்கானிடம் அன்பு காட்டினார். விசேஷமான சமயங்களில் தான் அணிந்து கொள்வதற்காக வைத்திருந்த உயர்ந்த ஆடைகளை எடுத்து யூசப்கானிடம் கொடுத்து அதை அவன் அணிந்து கொள்ளத்தான் வேண்டும் என்று வற்புறுத்தினார். அவருடைய அன்புப் பிடியிலே சிக்குண்ட அவன் சில வேளைகளில் அவஸ்தைப்படவும் வேண்டியிருந்தது.

அன்று அவனைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பாதவர்; தெரிந்து கொண்ட ஒரு சில செய்திகளையும் அலட்சியமாக மதித்தவர் இன்று அவைகளில் ஆர்வம் காட்டலானார். போர்த்துகீசியர்களின் உடையில் பொலிவுடன் விளங்கிய அவனைப் பார்த்துக் கூறினார்:

''யூசப்கான். இந்த உடையில் நீ எங்களைப் போலவே இருக்கிறாய். அந்தத் தலைப்பாகை மட்டும் இல்லா விட்டால் உன்னை எங்கள் நாட்டில் அந்நியன் என்றே யாராலும் கூற முடியாது'' என்றார் கப்பல் அதிகாரி. யூசப்கான் ஒரு நீண்ட துணியை எடுத்துத் தன் நாட்டு வழக்கப்படி தலையிலே முண்டாசாக கட்டிக் கொண்டிருந்தான். அதுவும் அவனுக்குக் கம்பீரமாகத்தான் இருந்தது, சுல்தானைப் போல. தலைவரின் பாராட்டுக்குத் தன் முறுவலையே பதிலாக்கி விட்டுத் தன்னையே தங்கள் பார்வையால் விழுங்கிக் கொண்டிருக்கும் மற்ற மாலுமிகளைப் பார்த்தான். அன்று மதிப்போடு பார்த்தவர்களின் முகத்திலே இன்று இலேசான வெறுப்புப் படர்ந்திருப்பதை உணர்ந்தான் யூசப்கான். கப்பல் தலைவரிடம் தான் பெறும் சலுகைகள் தான் அதற்குக் காரணம் என்பதை அவன் அறியாமலில்லை.

''யூசப், நீ எங்கள் நாட்டுக்கு வந்து எங்களில் ஒருவனாகவே ஆகி விடேன். உன் வீரத்துக்கும் திறமைக்கும் எங்களிடம் நல்ல வரவேற்பிருக்கும். பெரு வாழ்வு வாழலாம்'' என்றார் கப்பலின் தலைவர்.

யூசப் அவரைப் பார்க்காமலேயே, ஆனால் கீழ்த் தளத்தில் தங்களையே பார்த்தபடி காரியங்களில் ஈடுபட்டிருக்கும் மாலுமிகளைப் பார்த்து முறுவல் செய்துகொண்டே, ''அப்படியென்றால்?'' என்று கேட்டான்.

''எங்கள் இனத்தவனாகி விடு. ஏற்றமிக்க வாழ்வுக்கு ஏற்பாடு செய்கிறேன்.'' யூசப்கானைக் கிறிஸ்துவ மதத்தைத் தழுவச் செய்யும் முயற்சியிலே ஈடுபடலானார் அவர்.

''உங்கள் இயேசுவின் வழியைப் பின்பற்றச் சொல்கிறீர்களா?'' என்று கேட்டு இடி இடியென நகைக்கலானான் யூசப்கான்.

அவனது வெறிச் சிரிப்பைக் கண்டு வெருண்டவர் விட்டுக் கொடுக்காமல், ''மதம் மாறினால், இந்தியத் துறைகளை நிர்வகிக்கும் பிரதிநிதியாக உன்னை ஆக்கும்படி எங்கள் மன்னரிடம் சிபாரிசு செய்வேன்'' என்றார்.

''என் புனித இஸ்லாத்தைத் துறந்து இன்னொரு மதத்தைத் தழுவுவதா? அதுவும் பதவிக்கும் பகட்டான வாழ்வுக்கும் ஆசைப்பட்டு. அதைவிட என்னை அந்த மரணக் கம்பத்திலேயே கட்டி வைத்திருக்கலாம் ஐயா!'' என்று மனம் நொந்து போய்க் கூறினான் இனப் பற்று மிகுந்த யூசப்கான். இஸ்லாத்தைத் தன் உயிருக்கும் மேலாக மதிப்பவன் அவன்.

யூசப்கானின் உள்ளத்தைப் புரிந்து கொண்ட கப்பல் தலைவர் இது விஷயமாகத் தங்களிடையே கசப்பை வளர்க்க விரும்பாதவராக, ''உன்னைக் கட்டாயப்படுத்தும் நோக்கத்துடன் நான் இதைச் சொல்லவில்லை, யூசப். இதனால் எங்கள் நாட்டிலே ஏற்றம் பெறும் வாய்ப்பு உனக்கு உண்டு என்று கூறினேனே தவிர உன் மத உணர்ச்சியைப் புண்படுத்தும் எண்ணத்தோடு இதைக் கூறவில்லை'' என்றார்.

''ஐயா! தாங்கள் என் நண்பரானால், என் நல் வாழ்வில் அக்கறை உள்ளவரானால் நான் உங்களிடம் ஒரு சிறு உதவியை வேண்டிப் பெறலாமென்று நினைக்கிறேன்'' என்றான் யூசப்கான்.

''இந்தக் கப்பல் இன்று கடலில் மிதந்து கொண்டிருப்பதற்கு, இதில் உள்ளவர்கள் உயிரோடு உலாவிக் கொண்டிருப்பதற்கு, விலை மதிப்பற்ற பொருள்களோடு நாங்கள் எங்கள் தாய்நாட்டுக்குத் திரும்பிக் கொண்டிருப்பதற்குக் காரணமான நீ கேட்பதை நான் மறுப்பதானால் அது நன்றி கொன்ற தன்மையாகவல்லவா ஆகும்?''

''விசேஷமாக ஒன்றுமில்லை; நான் என் தாய்நாட்டுக்குப் போக விரும்பவில்லை. இந்திய நாட்டின் துறைமுகங்கள் ஏதாகிலும் ஒன்றில் என்னை இறக்கி விட்டு விடுங்கள். என் நாட்டினரில் எத்தனையோ பேர்கள் இந்திய மன்னர்களின் அவையிலே தங்கள் திறமைக்குத் தக்க பெருமை பெற்று வாழ்ந்து வருவதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களைப் போல நானும் என் அதிர்ஷ்டத்தை நாடி அங்கே போகலாம் என்று எண்ணுகிறேன்'' என்றான் யூசப்கான். அவனது மனத் திரையிலே கன்னிக் கோட்டையில் கண்ட பாரதத்தின் பசுமையான காட்சிகள் படங்களாக விரிந்தன.

''இவ்வளவுதானே? உன் விருப்பப்படியே உன்னை இந்திய மண்ணில் இறக்கி விட்டுச் செல்கிறேன். இன்னும் இரண்டு நாளில் நமது கப்பல் கோவா துறைமுகத்துக்குப் போகும். அங்கிருந்தே நீ, அதிர்ஷ்டத்தை நாடி உன்னுடைய பிரயாணத்தைத் தொடங்கலாம்'' என்றார் கப்பல் அதிகாரி.

அன்றிரவு யூசப்கான் படுக்கச் செல்லவே இல்லை. அவன் தூக்கத்தைப் பூரணமாக அனுபவித்து எத்தனையோ நாட்களாயிற்றே. சுருண்டு சுருண்டு உருளும் கடல் அலைகளையே கண் கொட்டாமல் பார்த்தபடி கப்பலின் மேல்தளத்தில் நின்று கொண்டிருந்தான் தன்னந் தனியாக. அவன் உள்ளத்திலும் எண்ண அலைகள் அப்படித்தான் உருண்டு

உடைந்து கொண்டிருந்தன. வீரவாழ்வு என்னும் தீராத வேட்கையோடு தாய்நாட்டி லிருந்து கிளம்பிய நாள் முதல் இன்றைய நிலை வரை எண்ணிப் பார்த்தான் யூசப்கான். விதி ஏதோ ஒரு காரியத்துக்காகவே காரணத் துடன் இப்படி யெல்லாம் தன்னை ஆட்டுவித் துக் கொண்டிருக்கிறது என்ற முடிவிலேதான் முற்றுப்பெற்றது அவன் சிந்தனை. இன்னும் இரண்டு நாளில் கோவா துறைமுகத்தில் விடுதலை பெறவேண்டும் என்ற தவிப்போடு இருந்தவனுக்கு அந்தக் கப்பல் தன் வேகத்தை இழந்து நங்கூரம் பாய்ச்சி நடுக்கடலில் நிற்பதாகத் தோன்றியது.

விடுதலை வேட்கையில், தன்னை மறந்து கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த யூசப்கானைக் கப்பலில் ஏற்பட்ட சல சலப்பு தன் நிலைக்குக் கொண்டு வந்தது. பாய்மரத் தின் உச்சியில் உள்ள தொட்டியில் நின்றபடி தொலைதூரத்துக் காட்சியைக் கண்டு சொல் பவன் கப்பல் தரையைச் சமீபித்து விட்ட தாக உற்சாக மிகுதியோடு கூறிக்கொண்டிருந் தான். கப்பலின் ஓரத்துக்கு ஓடி வந்து குவிந்த மாலுமிகள் தூரத்தே தெரிய வேண் டிய கரைப் பகுதியைக் கண்களை இடுக்கிக் கொண்டு கவனித்து உணரும் முயற்சியில் ஈடு படலானார்கள்.

எல்லையில்லாது பரந்து கிடக்கும் கருநீலக் கடலில் கவலையோடு பிரயாணம் செய்யும் மாலுமிகளுக்கு மகிழ்ச்சியைத் தரும் காட்சி தூரத்தில் தோன்றிக் கொண்டிருந்தது. புகை யின் நடுவே முளைத்த கருநீலக் கோடுபோலக் கரை தெளிவாகிக் கொண்டிருந்தது. கப்பலில் உள்ளவர்களின் முகத்தில் ஒளி பரவுவதைப் போல மங்கலான அந்தக் காட்சியிலும் மெல்ல மெல்ல விவரங்கள் கூடலாயின. அவர்கள் காட்சிக்கு எல்லைக் கோடாக உயர்ந்தும் தாழ்ந்தும் ஓடிய மலைத் தொடரை அடுத்து அடர்ந்த காடுகளின் பசுமை செறிந்த தோற்றமும் சற்று நேரத்துக் கெல் லாம் தென்னை மரங்களின் நெளிவிட்டாத காட்சியும் புலனாயின. அதைத் தொடர்ந்து படகுகளில் கப்பலை நோக்கி வரும் சுதேசி களின் ஆரவாரம் மிக்க ஓசையும் கேட்க லாயிற்று. கப்பலில் உள்ளோர் பரபரப்புடன் இங்கும் அங்கும் ஓடி நங்கூரம் பாய்ச்சுவதற் கான காரியத்தில் ஈடுபட்டிருந்தார்கள். சற்று நேரத்துக்கெல்லாம் கப்பல் கோவா துறை முகத்தில் போய் நங்கூரமிட்டு நின்றது.

போர்த்துகீசியர் சீருடை அணிந்து கப்ப லில் அணிவகுத்து நின்றார்கள். கப்பல் தலைவ ரும் தமக்கு உரிய கம்பீரமான உடையணிந்து துறைமுக அதிகாரியை வரவேற்பதற்குத் தயாராக இருந்தார். துறைமுகத்தில் வேறு சில கப்பல்களும் சிறிய பெரிய படகுகளும் குழுமிக் கிடந்தன. கோவா துறைமுகத்தின் அதிகாரியும் இந்தியாவில் உள்ள போர்த்து கீசியப் பகுதிகளின் நிர்வாகியுமான டாம் பிரான்ஸிஸ்கோ கோடென்ஹோ (Dom Francisco Coutinho) ஒரு படகில் கப்பலை நோக்கி வந்து கொண்டிருந்தார். அவர் படகு கப்பலை அணுகியதும் கப்பலிலிருந்து அவரை வரவேற்பதற்கு அறிகுறியாக எக் காளத்தை முழக்கினார்கள். நூலேணி வழி யாக கோடென்ஹோ கப்பலின் தளத்துக்கு ஏறி வந்த போது கப்பல் அதிகாரி கைலாகு கொடுத்து அவரை வரவேற்றார். சம்பிரதாய மான சடங்குகள் நிகழ்ந்தன. கப்பல் வீரர்கள் அணிவகுத்து நின்று செலுத்திய மரியாதை யைப் பெற்றுக் கொண்டு தலைவருடன் சம்பாஷித்தவாறே அவரது அறைக்கு வந்தார் துறைமுக நிர்வாகி. இத்தனை நேரமும் தனி யுடையில் தன்னிச்சையாக நின்று கொண் டிருந்த யூசப்கான் அவரது கவனத்தைக் கவர்ந்ததில் வியப்பில்லை. அந்த அந்நியனைப் பற்றி அவர் கப்பல் தலைவரிடம் விசாரித்த போது அவர் யூசப்கானின் கதையை அவரிடம் விவரித்து, அந்தக் கப்பலைக் கொள்ளையர் களிடமிருந்து காத்துக் கொடுத்த வீரன் என்று அவனை அவருக்கு அறி முகப்படுத்தி வைத்தார். மகிழ்ச்சி






தாயார்: இவனைப் பார்த்தேளா? வருஷம் பூராப் படிடான்னாலும் படிக்கமாட்டான். இன்னிக்குப் படிக்கப் போறானாம்.

---

யால் அவர் முகம் மலர்ந்தது. நன்றிப் பெருக்கினால் அவர் கண்கள் பளபளத்தன. பூசப் கானின் கரம் பற்றிக் குலுக்கித் தம் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொண்டார். கப்பலிலிருந்து விடைபெறும் போதும் அவனிடம் தனிப்படக் கையசைத்து விடைபெற்றார்.

துறைமுக நிர்வாகியின் விஜயத்துக்குப் பிறகு கப்பலிலுள்ளோர் கரைக்குச் செல்லுவதற்கான ஏற்பாடுகளில் ஈடுபடலானார்கள். அந்தத் துறைமுகத்தில் சில நாட்கள் தாமதிக்கத் திட்டமிட்டிருந்தார் தலைவர். புதிய உணவுப் பொருள்களை நிரப்பிக் கொள்ளவும் சாமான்களை ஏற்றவும் இன்னும் அவகாசமிருந்தது. ஆகவே கப்பலில் உள்ள அனைவருமே கரைக்குச் சென்று உள்நாட்டில் ஓரிரு நாட்களை இன்பமாகக் கழிப்பதற்கு அனுமதி அளித்தார் அதிகாரி.

பூசப்கானையும் கப்பல் தலைவரையும் தாங்கியபடி ஒரு படகு கோவாவின் கரையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. தன்னிடமிருந்து விலகிச் செல்லும் கப்பலையே வெறித்துப் பார்த்தபடி படகில் உட்கார்ந்திருந்த பூசப்கானின் நினைவு பல மாதங்கள் பின்நோக்கிச் சென்றது. அதே கப்பலில் தான் ஓர் அடிமையாக எல்லோரது அவமதிப்புக்கும் அலட்சியத்துக்கும் ஆளாகி அடைபட்டுக் கிடந்ததை எண்ணிப் பார்த்துக்கொண்டான். அராபியக் குதிரைகளை ஆயிரக் கணக்கில் வாங்கும் ஆற்றல் மிக்க அரசான 'பிஸ்நாகா' என்ற சிறப்பு மிக்க ராஜ்யத்தைப் பற்றி அறிந்து கொண்டதும் நினைவுக்கு வந்தது. ஒதுங்கிப் போய்க்கொண்டிருந்த கப்பலின் ஓர் ஓரத்தில் ஓங்கிநின்ற மரக் கம்பங்களின் மீது அவன் பார்வை பதிந்தது. 'என்னைத் தழுவியவர்கள் இது வரை தழுவிச் சென்றதே இல்லை. இன்று நீ செல்கிறாய். உனக்கு நல்வாழ்வு காத்திருக்கிறது போய் வா!' பனித்த கண்களோடிருந்த அவன் பார்வைக்குப் படகின் ஆட்டத்தில் அந்தக் கம்பங்கள் அசைந்து விடை கொடுப்பது போலிருந்தது.

தங்களிடமிருந்து விடைபெறும் பூசப் கானுக்குப் போர்த்துக்கீசியக் கப்பல் தலைவர் ஒரு பெரிய விருந்தே வைத்தார். கொடுமைப்படுத்துவதில் எப்படி எல்லை மீறியவர்களாக இருந்தார்களோ அதேபோல் அன்பை வெளிப்படுத்துவதிலும் நடந்து கொண்டனர் போர்த்துக்கீசியர். பொற்காசுகள் நிறைந்த முடிப்பொன்றை வழிச்செலவுக்காக வைத்துக் கொள்ளும்படி அவனுக்கு வழங்கினர் கப்பல் தலைவர். பாரதத்தின் பழைமையான பட்டாக் கத்தி ஒன்றை விரும்பி விலை கொடுத்து வாங்கி வைத்திருந்தார் போர்த்துகீசியப் பகுதிகளை நிர்வகிக்கும் உயர் அதிகாரி. அற்புதமான வேலைப்பாடுகளைக் கொண்ட உறையோடு கூடியது அந்தக் கம்பீரமான கத்தி. கற்கள் வைத்து இழைத்திருந்த அதன் உறுதியான பிடியில் யாளியின் முகப்பும் யானைத் தந்த வேலைப்பாடுடனும் கூடிய கத்தி அது. அதனைப் போர்த்துக்கலின் மன்னருக்குப் பரிசாக அளித்துப் பெருமை அடைய எண்ணியே வாங்கி வைத்திருந்தாராம் பிரான்ஸிஸ்கோ கோடென்ஹோ. ஆனால் பூசப் கானின் வரவும் தோற்றமும் அவரது முடிவை மாற்றிவிட்டன. அந்த உயர்ந்த கத்தி பயனுள்ள இடத்திற்குப் போக வேண்டுமென்று விரும்பினாரோ என்னவோ. காட்சிப் பொருளாக மன்னர்களின் பொக்கிஷ அறையில் அடைபட்டுக் கிடப்பதை விட, பூசப் கானைப் போன்ற ஒரு வீரனின் கையில் அந்தக் கத்திக்கு அதிகப் பயனும் மதிப்பும் இருக்கும் என்ற முடிவோடு தமது அன்பளிப்பாக அதை அவனுக்கு அளித்துக் கௌரவித்தார். அதுமட்டுமல்லாமல் பல்லாண்டுகளுக்குமுன் பீஜப்பூரின் புகழ் பெற்ற தளபதியும் மந்திரியுமாக இருந்த 'ஆஸாத் கான்' என்ற ஆற்றல் மிக்க வீரனின் உடைமைகளைக் கொள்ளை கொள்ளும் வாய்ப்புப் போர்த்துக்கீசியர்களுக்குக் கிட்டியது. ஆஸாத் கான் தமது ஜாகிரிலே சேமித்து வைத்திருந்த ஏராளமான பொக்கிஷங்களைக் கைக்கொண்டார்கள் போர்த்துகீசியர். அப்போது அந்த மாவீரனின் உயர்ந்த ஆடை அணிகளும் அவற்றோடு வந்தன. டாக்கா மஸ்லின், காசிப் பட்டு ஆகியவைகளால் கண் கவர் வனப்பு மிக்க வண்ணங்களில் தயாரிக்கப்பட்ட கம்பீரமான உடைகள் ஆஸாத்கானுடையவை. (ஆரம்ப காலத்தில் பீஜப்பூர் சுல்தான் இப்ராஹிம் ஆதில்ஷாவின் அன்புக்கும் மதிப்புக்கும் உரியவராக விளங்கியவர் ஆஸாத் கான். பிற்காலத்தில் மன்னரின் வெறுப்புக்கும் கோபத்துக்கும் ஆளானார். போர்த்துகீசியர்களோடு சேர்ந்து கொண்டு மன்னர்

இப்ராஹிமுக்கு எதிராக அவரது சகோதரர் அப்துல்லாவை அரியணையில் அமர்த்த நடத்திய புரட்சியிலே தோல்வி கண்டார் ஆஸாத் கான். அப்போது அவரது உடைமைகளைப் போர்த்துக்கீசியருக்கு உரிமையாக்கினர் மன்னர்.) இந்த விலை உயர்ந்த உடைகளை அதன் அழகுக்காகத் தங்கள் பண்டகசாலையில் போர்த்துகீசியர் பாதுகாத்து வைத்திருந்தார்கள். முஸ்லிம் இனத்து உயர்குடிப் பிறந்தோருக்கு உரிய அந்த ஆடை அணிகளால் ஐரோப்பியராகிய அவர்களுக்குப் பயன் ஏதுமில்லை. அதன் நினைவு கோடென்ஹோவுக்கு வரவே ஆஸாத் கானின் சிறந்த ஆடைகளில் சிலவற்றையும் பூசப் கானுக்கு அளித்து அதை அணிந்து கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். பொன்னுடை போர்த்தி, பொற்கிழி அளித்து, என்றும் காக்கும் இரும்புக் கத்தி ஒன்றையும் தங்கள் நன்றியின் அடையாளமாக, பூசப் கானுக்குக் கொடுத்துவிட்டுப் பிரிய மனமில்லாமல் விடை அளித்தார்கள்.

பூசப் கான் போர்த்துகீசியர்களிடம் தான் பட்ட துன்பங்களை யெல்லாம் மறந்தான். அவர்களின் நட்பும் இன்றைய நல்லெண்ணமும்தான் அவன் இதயத்திலே நிறைந்திருந்தன. உணர்ச்சிப் பெருக்கால் பேச நாவெழாத நிலையில் அவர்களைத் தழுவிக்கொண்டு கண்கலங்கி விடை பெற்றுக் கொண்டான்.

''இந்தக் கோவா துறைமுகம் உன்னை என்றைக்கும் எந்த நிலையிலும் வரவேற்கக் காத்திருக்கும் பூசப்கான்! என்றாவது தாய் நாடு செல்ல விரும்பினால் தயக்கமின்றி எங்கள் உதவியை நாடி வரலாம் நீ'' என்றார் உயர் அதிகாரி கோடென்ஹோ.

''உங்கள் அன்புச் சுமையோடு இந்தப் பொருள் சுமைகளையும் அளித்து என் போக்குக்கு வேலியிட்டு விட்டீர்கள்...'' என்று வேடிக்கையாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டு கிளம்பினான் பூசப்கான். போர்த்துக்கீசிய மாலுமிகளின் கூட்டம் அவன் தங்களிடமிருந்து பிரிந்து செல்வதையே பார்த்துக் கொண்டு நின்றது. அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டும், சிலபோது அவர்களைப் பார்த்தபடியும் பின் நோக்கியபடியே நடக்கலானான் பூசப்கான்.

கோவாவின் துறைமுகப் பகுதியை விட்டுக் கூட்டம் நிறைந்த உள்நாட்டுக்கு வந்தான் பூசப்கான். விதவிதமான விலை உயர்ந்த பொருள்களைக் குவித்துக்கொண்டிருந்தார்கள் வியாபாரிகள். பாரதத்தின் செல்வங்களை வாரிக் கொண்டு போவதற்காக வரும் அந்நியர்களின் நடமாட்டம் மிகுந்த துறைமுகப்பட்டினமானதால் அங்கு எந்தப் பொருளும் எளிதில் கிடைக்கும் வாய்ப்பு இருந்தது. வீரனை அவன் கவனத்தைக் கவர்ந்தது ஆயுதங்களை அழகுபட அடுக்கி வைத்திருந்த அங்கிருந்த ஓர் அங்காடிதான். வாளிலே எத்தனை விதம், எத்தனை ரகம்! விரல் நீளமுள்ள குத்துவாளிலிருந்து வலிமை மிக்கவர்கள் இரண்டு கைகளாலும் பிடித்துச் சுழற்றும்படியான பெரிய வாள் வரை எல்லாமே இருந்தன அங்கே. மார்பை மறைக்கும் இரும்புக் கவசங்கள், முகத்தை மறைக்கும் முக மூடிகள், உடலில் அணிந்து கொள்ளும் இரும்பு நூலால் பின்னிய சட்டைகள், ஈட்டிகள், வேல், வாள், சூலம் இப்படி இந்திய நாட்டின் போர்க் கருவிகள் அத்தனையையும் காட்சிப் பொருளாக்கி இருந்தார்கள் அந்த அங்காடியிலே. வேல் எறிந்து வீழ்த்துவதிலே வல்லவன் பூசப்கான். வழுவழுப்பாக்கி நீண்ட உறுதியானதொரு கம்பிலே கருத்தைக் கவரும் வகையில் அதன் ஒரு முனையில் கூரான கொழு ஒன்றைப் பொருத்தி இருந்த ஈட்டி ஒன்று பூசப்கானின் கவனத்தை ஈர்த்தது. அதைக் கையில் எடுத்து வீசும் நிலைக்குச் சுழற்றிப் பார்த்தான். ஈட்டியின் வேலைப்பாடும் அதன் உறுதியும் தரமும் அதைத் தன்னுடைய தாக்கிக் கொள்ளும் தவிப்பை ஏற்படுத்தின. குத்து வாள் ஒன்றையும் அந்த ஈட்டியையும் வாங்கிக்கொண்டு மேலே நடந்தான்.

குதிரைச் சந்தை கூடியிருந்தது. வனப்பிலும் வலுவிலும் சிறந்த குதிரைகளைக் கொண்டு வந்து குவித்திருந்தார்கள் அராபியக் குதிரை வணிகர்கள். கம்பீரமான அந்த அசுவங்களின் தோற்றத்திலே மனத்தைப் பறிகொடுத்து மயங்கி நின்றான் பூசப்கான். தனது பிரயாணத்துக்கு இந்தப் பிராணியின் உதவி அவசியம் தேவை என்ற முடிவுக்கு வந்த பூசப்கான் வெண் புரவி ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதன் விலையை விசாரித்தான். இளமையும் வீரமும் பொலியும் உருவில், தன் இனத்தவன் ஒருவன் குதிரை கேட்டு நிற்பதைக் கண்ட வியாபாரி விலையைப் பற்றி அதிக பேரம் பண்ணவில்லை. கனைத்துக் கால்களால் தரையைக் கிளறியபடி கம்பீரமாக நின்ற அதைத் தட்டித் தடவிக் கொடுத்தான். உடலைச் சிலிர்த்துக் கொண்ட அதன் மீது தாவி ஏறி அமர்ந்தான் பூசப்கான். செழித்து வளர்ந்திருந்த தன் பிடரி மயிர் ஆட அசையக் கம்பீர நடைபோட்டது குதிரை.

காலை இளம் வெயில் கொங்கணப் பிரதேசத்தின் குளிருக்கு இதமான கதகதப்பைக் கொடுத்துக் கொண்டிருந்தது. வண்ண மலர்கள் தேன் சிந்தி மலர்ந்து வண்டுகளின் வரவை எதிர்நோக்கி மணம் பரப்பிக்கொண்டிருந்தன. குஞ்சுகளுக்கு இரை தேடக் கிளம்பிய பறவைகள் தங்கள் காரியத்தை மறந்து காதல் விளையாட்டுக்களில் ஈடுபட்டுக் களிப்போடு கானமிசைத்துக் கொண்டிருந்தன. இரவுக் கன்னி தன் பனியாடையைக் களைந்து பசுமைப் பரப்பிலே காயவைத்திருந்தாள். அது வைரக் கற்களாக ஒளி வீசிச் சிரித்துக் கொண்டிருந்தது. இயற்கையின் இத்தனை கோலாகலங்களையும் பார்த்து, ரசித்து மகிழ்ந்தபடி இடையிலே வாளும், கையிலே வேலும், உள்ளத்திலே உவகையுமாக வளைந்து வளைந்து வழி காட்டிக் கொண்டு செல்லும் அந்தப் பாதையைத் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான் பூசப்கான். குதிரைமீதுதான்! ஆனால் அந்தப் பிராணியை விரட்டி ஓட்டவில்லை அவன். கடிவாளத்தைக் கூட அதன் கழுத்திலேயே துவளப் போட்டிருந்தான். அந்த ஆற்றல் மிக்க பிராணி தன்னிச்சைப்படி போய்க்

### பேச்சின் மதிப்பு

அமெரிக்கப் பாங்கு முதலாளிகளின் சங்கத் தலைவர் தோமாஸ் லிவிங்ஸ்டனுக்கு 'தாம் மிக அழகாகப் பேசுகிறோம்' என்று மிகப் பெருமை. ஒருநாள் பாங்கு முதலாளிகளின் கூட்டம் நடந்தது. தோமாஸா பேசாமலிருப்பார்? அவர் பேசத்தொடங்கியபோது ஒலிபெருக்கிக் கருவி தகராறு செய்தது. உடனே தோமாஸ் உரத்துக் கத்திப் பேசினார். தாம் பேசுவது எல்லோருக்கும் கேட்குமா என்ற ஐயத்தில் ''நான் பேசுவது கடைசியில் கேட்கிறதா?'' என்றார். பின் வரிசையிலிருந்த ஒருவர் ''இல்லை'' என்று கத்தினார். உடனே முன் வரிசையிலிருந்த ஒருவர், ''இங்கு நன்றாகக் கேட்கிறது. நீங்கள் இங்கு வந்து விடுங்கள், நான் அங்கே போய் விடுகிறேன்'' என்றார். தோமாஸ் லிவிங்ஸ்டனின் முகத்தில் ஈயாடவில்லை.



கொண்டிருந்தது. ஆனால் அதன் அந்த மந்த நடையிலும் ஒரு கம்பீரமிருந்தது.

மேற்குக் கடற்கரைப் பகுதிக்கு அரண் போல அமைந்திருந்த மலைத் தொடரைக் கடந்து பெல்காம் வந்து சேர்ந்த யூசப்கான் பாரதத்தின் இயற்கை அழகைக் கண்டு பேச்சற்ற நிலையில் பிரமிப்படைந்துபோனான். மந்திரவாதிகள் மாயா உலகைச் சிருஷ்டித்து அதனுள் அழைத்துச் செல்லும் அற்புதத்தைப் பற்றிக் கற்பனை உலகில்தான் கண்டிருக்கிறான். தேவதைக் கதைகளில் தோன்றும் தெய்விக அழகு நிறைந்த ஓர் இந்திரஜால உலகைக் கண்ணெதிரே கண்ட போது யூசப்கானால் நம்பவே முடியவில்லை. இயற்கை தன் மரகத அங்கியை விரித்திருக்கும் அற்புதத்தைக் கண்டு வியந்தே போனான் அவன். எங்கு திரும்பினாலும் பசுமை! பசுமை! பசுமை! நெடுஞ்சாலைகளை ஒட்டினாற்போலக் குளிர் தரும் சோலைகள். சலசலத்து ஓடும் நீரோடைகள். பசி தீர்க்கும் பழ மரங்கள். தங்கக் கட்டிகளை போலச் சாலையோரத்து மரமொன்றில் தொங்கிய கனியொன்றைப் பறித்துச் சுவைத்தான் யூசப்கான். அப்பப்பா! எத்தனை இனிமையான சுவை! அதைப் போன்றதொரு கனியை அவன் நாட்டிலே கண்டதேயில்லை. அவன் உண்டது மாங்கனி. அவன் மனமெல்லாம் நிறைந்திருந்தது அதை உண்ட போது. வெகு நேரம் வரை அதன் சுவை அவன் நாவை விட்டு அகலவே இல்லை.

'எத்தனை வளமான நாடு இது! அதனால் தான் என் தாயகத்திலிருந்து வந்தவர்களெல்லாம் இதைத் தங்கள் நாடாகவே எண்ணித் தங்கிவிடுகிறார்கள் போலும். அவர்கள் திரும்பாத ரகசியம் இப்போதல்லவா புரிகிறது!' என்று வியந்தவாறு வழிநடக்கலானான் யூசப் கான். வழியில் குறுக்கிடும் குக்கிராமங்களில் தன் பசியைத் தணித்துக் கொள்ள மக்களிடம் அணுகிய போது அவர்கள் அவனை அகமும் முகமும் மலர வரவேற்று வயிறார உணவு படைத்து உபசரித்த பண்பாட்டை எண்ண எண்ண இந்த நாட்டின் மீது ஒரு தனியான பற்றுதலே ஏற்பட்டு விட்டது அவனுக்கு.

தலைநகருக்குச் செல்லும் வழியைக் கேட்டறிந்து கொண்டு நீண்டு கிடந்த நெடுஞ் சாலையிலே தனது பிரயாணத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தான் யூசப்கான். பீஜப்பூர் என்ற பெருமை மிக்க முஸ்லிம் பேரரசின் அவையை நாடிப் போகிறோம் என்ற நினைவு அவனுக்குப் பிரயாணத்தில் களைப்பைத் தோற்றுவிக்கவில்லை.

அடர்ந்த கானகமொன்று குறுக்கிட்டது. அதன் வழியே கானகத்தின் கம்பீரமான அழகை ரசித்தபடி குதிரையைச் செலுத்திக் கொண்டிருந்தான். கிருஷ்ணா நதியின் கிளையான மால்பிரபா என்ற ஆற்றின் கரையோரத்துக் காடு அது. வேங்கையின் உடலைப்போல நிழலின் இடையே வெயில் ஒளிப்பொட்டுக்களாகச் சிதறிக் கிடந்தது. எங்கோ தூரத்தில் பாறைகளில் மோதிச் செல்லும் நதியின் ஓசை அந்தத் தனிமையின் இனிமைக்குச் சுருதி சேர்ப்பது போலிருந்தது.

தங்குதடையின்றிச் சென்றுகொண்டிருந்த குதிரை எதையோ கண்டது போல மிரண்டு நின்று கனைத்தது. சுற்றுமுற்றும் பார்த்த யூசப் கானின் கண்களுக்கு எதுவும் புலப்படவில்லை. ஆனால் குதிரையோ முன்னே செல்ல மறுத்தது. உன்னிப்பாகப் பார்த்த போது அவன் உடல் சிலிர்த்தது. அவனுக்கு முன்னேயுள்ள மரத்தில் நிழலும் ஒளியும் பின்னிக் கிடந்த அதன் கிளையில் பதுங்கியபடி அவனையே பார்த்துக் கொண்டிருந்தது ஒரு சிறுத்தை. அந்தச் சூழலில் அது இருப்பதே தெரியவில்லை. அப்படியொரு அதிசய உடலமைப்பு அதற்கு. தன் அனல் விழிகளை யூசப் கானின் மீது பதித்து எந்த நிமிஷமும் பாய்வதற்குத் தயாராக இருந்தது. தன்னை நோக்கி இருக்கும் ஆபத்தைத் தான் உணரு முன்பே தனக்கு உணர்த்திய குதிரையை நன்றியுடன் தடவிக் கொடுத்த யூசப் கானின் வலக் கரத்தின் பிடி கட்டியில் இறுகிற்று. தன்னை நோக்கி வந்த இரை நின்று நிதானிப்பதைக் கண்ட சிறுத்தை பாய்வதற்குத் தயாரானபோது யூசப்கானின் கரத்திலிருந்த கட்டியும் பாய்ந்தது. கட்டியிலே செருகிக்கொண்டு சிறுத்தை சுருண்டு விழுந்தபோது உண்டாக்கிய கர்ஜனையினால் அந்தக் கானகமே கலங்கியது. பறவைகள் பீதியுடன் சிறகடித்துப் பறந்தன. குரங்குகள் கிறீச்சொலியிட்டுக் கிளைகளில் தாவியோடின. யூசப்கானின் குதிரை வெருண்டு முன்னங் கால்களைத் தூக்கிக் கனைத்துக் குதித்தது. உடலின் பாய்ந்து வெளிவந்துவிட்ட கட்டியிலிருந்து விடுபட வீணான முயற்சியில் ஈடுபட்ட சிறுத்தையின் மூச்சு மெள்ள மெள்ள அடங்கிக் கொண்டிருந்தது.

(தொடரும்)



# டிஸ்னியின் மாய உலகம்



திரைப் படத்துக்கு ஒரு ஹாலிவுட் — ஹாலிவுட் என்றாலே திரைப் படவுலகம் என்ற அளவுக்குப் புகழ் வாய்ந்த ஹாலிவுட் பட உலகில் புதிய சாதனைகள் பலவற்றைப் புரிந்தவர் வால்ட் டிஸ்னி. கற்பனை வேந்தன், கலையுலகப் பாணி என்றெல்லாம் பாராட்டப்பெறும் இந்த அற்புத மனிதரை அறியாதவர்கள் உலகில் அதிகம் இருக்க மாட்டார்கள்.

அவரது அரிய படைப்பில் உயிர்த்த 'மிக்கி மௌஸ்', [illegible] கோலம் கொண்ட 'டொனால்ட் டக்', 'பனி அரசியும் விநோதக் குள்ளர்களும்', 'புளூட்டோ' என்ற கட்டி நாய்க் குட்டி, 'டம்போ' ஆகிய அதுகோஷ்டியினரை வரவேற்காத நாடுகள் உண்டா? அவர்கள் மட்டுமா வருகிறார்கள்? வரும்போதே தங்களுடன் கூட மகிழ்ச்சியையும் தோழமையையும் அல்லவா கொண்டு வருகின்றனர்?

ஹாலிவுட்டின் மிகச் சிறந்த பரிசான ஆஸ்கார் பரிசை 22 தடவைகள் தட்டிப் பறித்துக் கொண்டவர் டிஸ்னி. தமது செயல் திறனுக்காக இவர் பெற்றிருக்கும் மற்றப் பரிசுகளுக்கோ அளவே இல்லை.

டிஸ்னி லாண்ட் இவரது படைப்புகளுக்கெல்லாம் சிகரம் போன்றது. நாள்தோறும் பல்லாயிரக் கணக்கான மக்கள் இதனைக் கண்டு களிக்க வருகின்றனர். அமெரிக்க நாட்டுக்கு வரும் பிரமுகர்களில் எவரும் இதனைக் காணத் தவறுவதில்லை. ஆனால் ஒரே ஒருவருக்கு மட்டும் டிஸ்னி லாண்டைக் காணும் அனுமதி மறுக்கப்பட்டது. குருஷேவ் விரும்பினார்; அது நிறைவேறவில்லை.

இது உருவாகிய ஐந்து ஆண்டுகளில் 70 நாடுகளிலிருந்து 19 மில்லியன் மக்களுக்கு மேல் இங்கு வருகை தந்திருக்கின்றனர்.

மக்களோடு மாமன்னர்களும், அரசியல் தலைவர்களும் இங்கு ஆர்வத்தோடு விஜயம் செய்திருக்கின்றனர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் நமது இணையற்ற தலைவர் நேரு, குடியரசுத் தலைவர் டாக்டர் ராதாகிருஷ்ணன், பெல்ஜியம் நாட்டு மன்னர் பெடுவின், ஜோர்டான் அரசர் ஹுசெய்ன், கிரீஸ் நாட்டு வேந்தர் சோபியா, இந்தோனேசிய அதிபர் சுகர்னோ, மொராக்கோ தேச அரசர் முகம்மது இன்னும் பலராவர்.

அரச மரியாதைகளுடன் ஒரு முறை டிஸ்னி லாண்டுக்கு விஜயம் செய்த மொராக்கோ அரசர், மீண்டும் அதனைக் காணும் ஆர்வத்தால் கட்டணம் செலுத்திச் சாதாரண மனிதர் போல் அங்கு சென்றிருக்கிறார் என்றாலே போதும் — இதன் கவரும் தன்மை விளங்கிவிடும்.

வால்ட் டிஸ்னியின் எல்லையற்ற மகிழ்ச்சியின் சாயலைக் கொண்டிருக்கிறது டிஸ்னி லாண்ட். இளம் வயதில் அவருக்கு ஏற்பட்ட அனுபவமே அது உருவானதற்குக் காரணம்.

ஓய்வு நேரங்களில் எல்லோரையும் போல இவரும் தமது குழந்தைகளை அழைத்துக் கொண்டு ஏதாவது ஓர் இன்பப் பூங்காவுக்குச் செல்வார். அங்கு குழந்தைகள் மகிழ்ச்சியுடன் விளையாடிக் கொண்டிருக்கும். அந்நேரங்களில் எல்லாம் இவருக்கு 'போர்' அடிக்கும். இவர் அனுபவிக்கக் கூடிய நிகழ்ச்சிகள் என்று அங்கு ஏதும் இருக்காது. தமது மனத்துக்கிசைந்த பூங்காக்களுக்குக் குழந்தைகளை அழைத்துச் சென்றுவிட்டாலோ அங்கே அவர்கள் 'உம்'மென்று முகத்தை வைத்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் விரும்பத் தக்க விளையாட்டுக்களோ அல்லது வேடிக்கைகளோ அங்கிருக்காது. ''பெற்றோர்களும் குழந்தைகளும் ஒரே சமயத்தில் இன்புறக் கூடிய ஒரு கேளிக்கைப் பூங்கா இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?'' என்று அச்சமயங்களில் இவர் எண்ணிக் கொண்டார். அந்த எண்ணத்தின் முதிர்வின் வடிவாகி உருவானதே டிஸ்னிலாண்ட்.







லாஸ் ஏஞ்செல்ஸுக்குத் தென்கிழக்கில் 25 மைல் தூரத்தில் உள்ள 'அனஹைம்' என்ற இடத்தில் இது அமைந்திருக்கிறது. 31 மில்லியன் டாலரை விழுங்கிக்கொண்டு 60 ஏக்கர் நிலப் பரப்பில் விரிந்து கிடக்கும் இதனைச் சுற்றி, மலைகளும் சிற்றாறுகளும், சோலைகளும் நிறைந்திருக்கின்றன.

டிஸ்னி லாண்டின் வாயிலில் கால்வைத்த உடனேயே நம்மை எதிர்கொண்டு அழைப்பவர் திருவாளர் மிக்கிமௌஸ் தான். முகப்பில் உள்ள மலர்ப் படுக்கையில் மிகப் பெரிய அளவில் இந்தக் கண்டெலியாரின் திருவுருவப் படம் இடம் பெற்றிருக்கிறது. அவரைத் தாண்டி உள்ளே சென்று விட்டால் ஒரு மாய உலகம் நம் கண் முன்னே பரந்திருக்கும்.

முதலில் பழங்கால வீதியை அடைவோம். ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு 'டிஸ்னி' வளரும் பருவத்தில் அமெரிக்க நகரங்கள் எவ்வாறு இருந்தன? அது போன்ற ஒரு நகரத்தின் வீதியை இந்த முக்கிய வீதி சித்திரிக்கிறது. இங்குள்ள எல்லாமே அக்காலத்தில் உள்ளவை போன்று சற்றும் மாறுபடாமல் கவனத்துடன் அமைக்கப்பட்டிருக்கின்றன.

பழங்காலத்தில் இருந்தது போன்ற வாயு விளக்குகள் வீதியை அலங்கரிக்கின்றன. நீளமான தொலை பேசிகளை இங்கு காணலாம். 'பென்னிஷாப்' எனப்படும் சில்லறைக் கடைகள், பழத் துண்டங்கள், மிட்டாய் விற்கும் கடைகள், மருந்துக் கடை, பாங்க், ஓவியக் கூடம், மற்றும் பலவகையான விளம்பரப் போர்டுகளைத் தாங்கிய கட்டடங்கள் இந்த வீதியில் உள்ளன. இங்குள்ள சினிமாத் தியேட்டரில் ஓடும் படங்கள் கூட அக்காலத்தில் இருந்தது போன்ற ஊமைப் படங்களே.



முக்கிய வீதிகளில் அமைந்திருக்கும் வீடுகள் பொருள்கள் அனைத்தும் வெளியுலகில் நாம் காண்பவைகளைவிடச் சற்றுச் சிறியவை. ஆனாலும் சிறியவை போலத் தோன்றாத மாதிரி வீதியாக இது அமைக்கப்பட்டிருப்பதால் உண்மையான அளவில் ஒவ்வொன்றும் எட்டில் ஐந்து பாகம் இருக்குமாறு உருவாக்கப்பட்டிருக்கின்றன.

இந்த வீதியில் தற்கால அமைப்புகளுடன் விளங்குபவை கடைகளின் உட்புறம் அமைந்திருக்கும் ஒளி அமைப்புக்களே. ஒளி அமைப்புக்கள் கூடப் பழங்கால முறையில்தான் முதலில் அமைக்கப்பட்டிருந்தன. ஆனால், கடைகளின் தோற்றப் பொலிவை அவை கெடுத்து விடுகின்றன என்று பார்வையாளர்கள் குறைப்பட்டுக் கொண்டதால் வேண்டா வெறுப்பாகத் தற்கால ஒளி அமைப்பை அங்கு ஏற்படுத்தினார் டிஸ்னி.



கற்பனை உலகம், துணிகர உலகம், எல்லைப்புற உலகம், எதிர்கால உலகம் என்று நான்கு பகுதிகளாக டிஸ்னி லாண்ட் வகுக்கப்பட்டிருக்கிறது. மக்களின் கவனத்தைக் கவரத்தக்க 45 வித அம்சங்கள் இங்குள்ளன. டிஸ்னியின் கற்பனை வளத்தைப் போல இந்த அம்சங்களும் நாள்தோறும் பெருகி வருகின்றன. அரசர்களாலும் விலை கொடுத்துப் பெற முடியாத அரிய பொருள்கள் இங்குள்ளன.

முக்கிய வீதியின் மறு கோடியில் அமைந்திருப்பது கற்பனை உலகம்; இதன் வாயில் அகழி சூழ அமைந்துள்ள 'தூங்கும் அழகி'க் கோட்டையால் காக்கப்படுகிறது. டிஸ்னி லாண்டின் மற்றெல்லா உலகங்களையும் விட மிகுந்த மகிழ்ச்சியைத் தருவது இந்தக் கற்பனை உலகமே. எளியவர் வாழ்க்கையில் காணவியலாதனவெல்லாம் இங்கு கற்பனையால் உருப்பெற்றுத் திகழ்கின்றன.

நிலா முற்றத்தில் காலை நீட்டி அமர்ந்து பாட்டி கதை சொல்ல ஆரம்பித்து விட்டால் குழந்தைகளுக்கு எவ்வளவு குதூகலம். மந்திரவாதிகளும், மாயக் கம்பளங்களும், ராஜகுமாரிகளும் ஒருவர் மாற்றி ஒருவர் வரமாட்டார்களா? குதிரைகள் பறக்கும், கோட்டைகள் நகரும் — இன்னும் என்னென்ன அற்புதங்களோ நிகழும்!



**இன்பவண்ணன்**

இங்கு 'அலிஸ்'டன் முயல் பொந்தினுள் சென்று வியத்தகு உலகினைக் காணலாம். 'சின்ட்ரெல்லா'வின் பூசணிக்காய் உருவச் சிங்காரத் தேரில் அமர்ந்து குழந்தைகள் வலம் வரும். சிறுத்த தலையில் தொப்பி அணிந்த பருத்த 'டம்போ' என்ற பறக்கும் யானைக்குட்டிகளில் ஏறிக் குழந்தைகள் கும்மாளம் அடிப்பார்கள். அச்சம் தரும் 'பீட்டர் பேன்' கடற்கொள்ளைக் கப்பலில் பயணம் நம் இரத்தத்தை உறைய வைக்கும்.

கற்பனை உலகிலிருந்து எல்லைப்புற உலகினை அடைந்தால், பழங்காலத்திலிருந்து துரிதமாக மாற்றம் அடைந்திருக்கும் அமெரிக்க வளர்ச்சிக் கால வரலாற்றை அறியலாம்.

1850ல் இருந்த மேற்கத்திய சுரங்க நகரம் இங்கு தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது. கருங்கல் பாறையினுள் அமைக்கப்பட்டிருக்கும் அச்சுரங்க வழியின் மேல் செயற்கை மலை ஒன்றையும் உருவாக்கி யிருக்கிறார்கள். எந்நேரமும் இச் சுரங்கத்தில் நான்றாடி ஆழமுள்ள ''அடிப்பாகமற்ற குழி'' என்ற ஒரு குழி இருக்கிறது. இதனிலிருந்து எழும் பேய்ச் சத்தம் மிகப் பயங்கரமாக இருக்கும். இச் சுரங்க வாயிலில் சிறிய நுழை வாயில்கள் பல நீண்டுகொண்டிருக்கும். இதற்குள் நுழைந்து வெளியேறுவது குழந்தைகளுக்கு மகிழ்ச்சி தரும் வேடிக்கை. சுரங்கத்தைச் சுற்றிக் காண 'கோச்'சில் செல்லலாம்.

எல்லை உலகில் மிஸிஸிபி ஆற்றினைப் போலத் தோற்றுவிக்கப்பட்டுள்ள நதியின் நீர் மிஸிஸிபி நீரைப் போல வெப்பமாகவும் சிவப்பு நிறமுடையதாகவும் இருக்குமாறு செய்திருக்கிறார்கள். இங்கு 'ஹக்பின்', 'டாம் சாயர்' ஆகிய படகுகளின் மறு அவதாரங்கள் உள்ளன. சுற்றிலும் வேறு சிறிய படகுகளும், செவ்விந்தியர்கள் தள்ளிச் செல்லும் படகுகளும், 'மார்க் ட்வெயின்' நீராவிப் படகும் இருக்கின்றன. ஆற்றைக் கடக்கும் பாலங்கள் அந்நாளில் இருந்தது போல் பீப்பாய்களின் மேல் மரக் கட்டைகளை அடுக்கி அமைத்திருக்கின்றனர். பாலத்தின்மீதிருந்து செவ்விந்தியர்களுடன் துப்பாக்கிச் சண்டை செய்யலாம். இங்கு தரப்படும் துப்பாக்கிகளில் நிஜக் குண்டுகள் இருக்காது. ஆற்றில் மீன் பிடிக்கவும் வசதி செய்திருக்கிறார்கள். தூண்டில் புழுக்களை நமக்குத் தர மார்க் ட்வெயின் சித்திரிக்கும் பாத்திரமான சதா வைக்கோலைச் சுவைத்துத் திரியும் சிறுவன் நின்றுகொண்டிருப்பான்.

எல்லை உலகினை அடுத்துத் துணிகர உலகிற்குச் செல்லலாம். ஆனால், இங்கு செல்லும் முன் நம்மை நாம் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும். மழை மிகுந்த வெப்ப மண்டலக் காடுகளுக்குள்ளும், பனிப் பகுதிகளிலும், காட்டாறுகளிலும் நம் பயணம் தொடரும். கம்போடியாவிலுள்ள கங்கையை விடப் பெரிய நதியான 'மேகாங்' நதியின் வழியே படகில் செல்லலாம். எகிப்து நாட்டின் 'நைல்', நீர் யானைகள் மிகுந்த 'காங்கோ', முதலை— செறிந்த 'அமேஸான்' ஆகிய நதிகளில் எல்லாம் இந்தப் படகுகள் சுற்றி வரும். இந்த உலகில் பயணம் செய்யும்போது ஒவ்வொரு கணமும் ஏதாவது எதிர்பாராத நிகழ்ச்சிகளுக்கு நாம் உள்ளாக நேரிடும். பயங்கர முதலைகள் நம் படகைக் குறியாகக் கொண்டு வாயைத் திறந்தவாறு அணுகும். அவற்றிடமிருந்து தப்பினோம் என்று எண்ணி விடுவோம்; அதற்குள் முரட்டு ஆப்பிரிக்க யானைகளின் பிளிறல் நம் அருகே கேட்கும். ஆமாம், நதியில் அவை இன்பமாக நீராடிக் கொண்டிருக்கும். சற்றுத் தொலைவில் கரைகளில் உள்ள மரங்களில் கொரில்லாக்கள் 'உர்'ரென்று உறுமிக்கொண்டிருக்கும். இடையில் நீர் யானைகள் எதிர்ப்படும். இவையன்றி, சிங்கங்களும், புலிகளும் கரைகளில் நின்று நம்மைச் சந்தேகக் கண்களோடு உற்றுநோக்கிக்கொண்டிருக்கும்.

இவற்றைக் கண்டு நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை. இங்குள்ள கொடிய விலங்குகள் நம்மைப் பயமுறுத்தும்; ஆனால் அவற்றால் நம்மைத் துன்புறுத்த இயலாது. பார்ப்பதற்கு உயிருள்ளவை போலத் தோன்றினாலும் அவை அனைத்தும் உயிரற்ற உருவங்களே! பிளாஸ்டிக், ரப்பர் ஆகியவற்றால் ஆன அவைகள் தானே இயங்கும் 'ஆடியோ அனிமேட்ரானிக்ஸ்' முறையில் செயல்படுகின்றன.

எதிர்கால உலகில் நம் கவனத்தைக் கவர்வது விண்வெளிக் கப்பல்தான். இதனில் ஏறி அமர்ந்து சந்திர மண்டலத்துக்குச் செல்லலாம். உண்மையில் அப்போது நாம் இருப்பது ஓர் அரங்கமே. ஆயினும் அங்கு நிகழும் இயக்க முறைகளால் வான வெளியில் சென்று திரும்பியது போன்ற உணர்வினை எய்துவோம். விண்வெளி ஆராய்ச்சித் துறையில் புகழ் வாய்ந்த 'வெர்னர் வான் பிரான்', 'வில்லி லே' இந்த அரங்கை நிர்மாணிக்க முன்னின்று உதவியிருக்கின்றனர்.

இங்கு நீர்மூழ்கிக் கப்பல்களும் உள்ளன. இதைப் போன்ற ஒரு பொய்யான தோற்றத்தை இதுவரை யாரும் ஏற்படுத்தியதில்லை. இது இயங்க ஆரம்பித்ததும் முற்றிலும் நாம் நீருக்குள் மூழ்கிச் செல்வது போன்றிருக்கும். ஆனால் கப்பல் இருப்பதெல்லாம் ஒரு தண்டவாளத்தின் மேல்தான். கப்பலின் அடிப் பகுதி மட்டும் நீரில் ஆழ்ந்திருக்கும். கப்பலில் உள்ள கண்ணாடி பதித்த துவாரங்கள் வழியே நாம் வெளியே நோக்கும்பொழுது நீரின் அடியில் உள்ள ஓர் உலகத்தைக் காண்பதுபோன்ற பிரமை கொள்ளுவோம். இக்கப்பல் வடதுருவப் பகுதியில் செல்லும்போது கப்பலுக்கு மேலே பனிப் பாறைகள் தான் தாளாவது போன்ற ஓசை எழும். ஆழ்கடலில் செல்லும்போது கடற்கன்னிகளையும், கடல் வாழ் உயிரினங்களை யும், பவளப் பாறைகளையும் காண்போம்.

எதிர்கால உலகில் நாம் கண வியப்பாகக் காண்பது 'மோனோ ரயில்'. கான்கிரீட் சட்டங்களால் ஆன பாதை மீது வழுக்கிச் செல்லும் இந்த ரயில் 13 லட்சம் டாலர் செலவில் உருவானது.

நாள் முழுவதும் இவ்வுலகங்களுக்குள் சுற்றித் திரிந்து காட்சிகளைக் கண்டாலும் மீண்டும் காண வேண்டும் என்ற ஆர்வம் யாருக்கும் தோன்றாமல் போகாது.



ஒரு கிளாஸ்

# கிஸான்

ஸ்க்வாஷ் அருந்தி

இளைப்பாறுங்கள்

அது சிறந்ததொரு
பழ ரசமாகும்




சுவை மிக்கது; அலுப்பு நீக்குவது; ஆரோக்கியமானது. தானே கனிந்த கனிகளிலிருந்து தயாரானது. வைட்டமின் சத்து நிறைந்தது. கிஸான் ஸ்க்வாஷ் ஆரஞ்சு, லெமன், மற்றும் ஆறு ரகங்களில் கிடைக்கிறது.

மற்ற எந்தத்
தயாரிப்பையும் விட
கிஸான் ஸ்க்வாஷ்கள்தான்
இந்தியாவில் அதிகமாக
விற்பனையாகின்றன

கிஸான் ப்ராடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்

# சிரிக்கவும் சிந்திக்கவும்

ஸர் ஆலிவர் பிராட் என்ற ஒரு பிரிட்டிஷ் வக்கீல் நீதிபதியின் முன் ஒரு விவாகரத்து வழக்கைப் பற்றி வாதாடிக்கொண்டிருந்தார். அவர் தமது வாதங்களுக்கிடையே கூறிய சில வாக்கியங்களாவன:

''....தாங்கள் தினமும் என்னைப் போன்ற வக்கீல்கள் விடும் 'கப்ஸ்'களை நம்பிக்கொண்டு அந்த ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டிருக்கிறீர்கள்.... தாங்கள் ஒரு நல்ல ஆத்மா. ஆனாலும் தாங்கள் எனக்குப் பல விதத்தில் தொந்திரவு கொடுத்துக் கொண்டு வந்திருக்கிறீர்கள்.... தங்களுடைய மூடத்தனமான சில அபிப்பிராயங்களையும் முடிவுகளையும் பற்றி நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை..... தாங்கள் நேற்றிரவு விடிய விடிய பிரிட்ஜ் ஆட்டம் ஆடிக்கொண்டிருந்திருக்கிறீர்கள்....''

தமது தொழிலினின்றும் விலகிக்கொள்ளப்போகும் அந்த வக்கீல் கடைசியாக நடத்தும் வழக்கு அது. அதனால் நீதிபதி, ''நீங்கள் ஆஜராகும் கடைசி வழக்கு இது ஆயிற்றே. உங்களிஷ்டப்படி எல்லாம் கூடப் பேசலாம்'' என்று சம்பிரதாயமாகச் சொல்லி வைத்தார். அதன் விளைவு இது. ஆனால் இது ஒரு கதை. ஏ. பி. ஹர்பர்ட் எழுதியுள்ள 'மிஸ்லீடிங் கேஸஸ்' என்ற வேடிக்கை வழக்குகளிலொன்றில் வரும் சம்பவம்.

கிட்டத்தட்ட இந்த முறையில் நமது தேச சட்ட சபைகளில் பேச்சுக்கள் கிளம்ப வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. சென்ற மாத இறுதியில் லோக சபைக் கூட்டம் முடிவடைந்த தினத்தன்று சபாநாயகர் ஒரு யோசனை தெரிவித்தார். இனி ஒவ்வொரு சட்ட சபைக் கூட்டத்தின் கடைசி நாளன்றும் சட்ட சபை அங்கத்தினர்கள் ஒரு மணி நேரம் தங்கள் இஷ்டம்போல் பேசலாம் என்று கூறியிருக்கிறார்.

இஷ்டம் போலப் பேசுவதற்கு நம்முடைய அங்கத்தினர்களுக்கு யாரும் சொல்லித் தர வேண்டியதில்லையே!

ஃ ஃ ஃ

இப்போதெல்லாம் பணம் பறிப்பதற்கு ஒரு திருடனாகவோ கொள்ளைக்காரனாகவோ இருந்தாக வேண்டிய அவசியமில்லை. கன்னக்கோல் வைத்து வீட்டிற்குள் புக வேண்டியதுமே இல்லை. ''நான் ஒரு போலீஸ்காரன்,'' ''நான் ...வரி இலாகா அதிகாரி'' என்று கூறி நடித்தே சுலபமாகப் பணம் பறித்து விடலாம்.

இந்த நிலை ஏற்பட்டிருப்பது, நமது நாட்டில் நடிப்புக் கலை மிகவும் அபிவிருத்தியடைந்து வந்திருப்பதை எடுத்துக் காட்டுகிறது போலும்! உத்தியோகஸ்தர்களைப் போல் நடிப்பவர்களை நம்பி ஏமாந்து போகிறவர்களே, அந்தச் சோணகிரிகளைச் சொல்லுங்கள்.

ஒருவர் இருட்டில் தனி வழியே நடந்து செல்கிறார். அவர் மிகுந்த தெய்வ பக்தி உள்ளவர். திடீரென்று எதிரே ஆண்டவன் காட்சியளிக்கிறார். அவருக்கு நான்கு கைகளிருக்கின்றன. வழிப்போக்கர் உடனே அந்தத் தெய்வத்தின் காலில் விழுந்துவிடவில்லை. அப்படிச் செய்வதற்கு அவர்கள் என்ன கிரிக்கெட் டெஸ்ட் பந்தயத்தில் நூறு ரன்களுக்கு மேல் எடுத்தாரா? எடுத்திருந்தால் பட்டோடி நவாபின் காலில் விழுந்த அந்த இளைஞரைப்போல் அந்த வழிப்போக்கரும் செய்திருப்பார்.

''எனக்கு உன் காணிக்கையைச் சமர்ப்பித்துவிடு. உன் பணப்பை, கடியாரம் எல்லாவற்றையும் நீயாகவே பக்தியுடன் எடுத்துக் கொடுத்துவிடு!'' என்கிறது தெய்வம்.

வழிப்போக்கர் பிரத்யட்ச தெய்வத்தை நம்பத் தயாராயில்லை. ''நீ அல்லது நீங்கள் கடவுளா?'' என்று கேட்கிறார்.

''அட கடவுளே! என்னையே நீ நம்பவில்லையா?'' என்று கடவுள் ஆச்சரியப்படுகிறார்.

''இல்லை. கடவுள் இப்போதெல்லாம் நேரில் ஆஜராவது சினிமாப் படங்களில் மட்டும்தான். தாங்கள் உண்மையில் யார்?''

''நான்...வரி இலாகா உத்தியோகஸ்தர்!''

''அப்படிச் சொல்லுங்கள்!'' என்கிறார் வழிப்போக்கர்.

ஃ ஃ ஃ

கிரிக்கெட் பந்தயத்திற்குப் போவதற்காக லீவு கேட்கும் மாணவச் சிறுவர்கள் 'எங்கள் பாட்டி இறந்து விட்டாள்' என்று கர்நாடக முறையில் காரணம் தெரிவித்திருக்க மாட்டார்கள். ''என் கொள்ளுப் பாட்டிக்குப் 'பர்த் டே' '', ''அப்பாவும் அம்மாவும் வீட்டில் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்.'' இப்படி ஏதாவது நவீனமாகக் கூறியிருப்பார்கள்.

லீவு கேட்கும் முறை காலத்திற்கேற்ப மாறிக் கொண்டே வருகிறது.

சில தினங்கள் முன் தெருவில் நடைபாதை வழியே சென்று கொண்டிருந்த போது ஒரு நண்பரைச் சந்தித்தேன். அவர் ஓர் அரசாங்க ஊழியர். கெஜட் பதிவானவர்:

''ஏன் ஜுரம் தேவலையா?'' என்று கேட்டு வைத்தேன். ஏனென்றால், சமீப காலமாக, இப்படிக் கேட்கா விட்டால் தங்களுக்கு ஜுரம் வரவில்லை என்று தங்களை அவமரியாதை செய்வதாக நினைத்துக் கொண்டு விடுகிறார்கள். அவர் தலையை ஆட்டினார்.

''இன்றைக்கு லீவு போலிருக்கிறது'' என்றேன்.

''ஆமாம். பால் கார்டு வாங்கப் போகணும். அதற்காக லீவு எடுத்துக் கொண்

டிருக்கிறேன். இன்றைக்கு இரண்டு மணியிலிருந்து கொடுக்கிறார்கள்'' என்றார்.

''நான் கூட வருகிறேன்'' என்று கூறி அவருடன் சென்றேன்.

கியூவில் நின்று வெகு நாளாகி விட்டது. விட்ட பழக்கம் மீண்டும் தொடங்க வேண்டியிருந்தது. பால் டெப்போ வாசலில் ஏற்கனவேயே கூட்டம் கூடியிருந்தது.

நீண்ட கியூ வரிசைகள் நின்றிருந்தன. 'வரிசை...கள்' என்று நான் பன்மையை உபயோகித்திருப்பதைக் கவனிக்கவும். — ஆண்கள் வரிசை வேறு. பெண்கள் வரிசை வேறு. அரசாங்க அதிகாரிகள் பண்டைய இந்தியப் பண்பாட்டை மறந்து விடவில்லையென்பதுதெரிந்தது.



**''பக்தா! உன் பக்திக்கு மெச்சினோம்! உனக்கு யாது வரம் வேண்டும் கேள்!''**

**''ஸ்வாமி! அரிசி கியூவில் நிற்கும்போது என் கால்கள் மரத்துப்போய்விடுகின்றன. வேறு இரண்டு கால்கள் முளைக்க அருள வேண்டும்!''**

நானும் நண்பரும் போய் நின்றோம். நான் சுமார் முப்பதாவது நபராக இருந்தேன்.

திறந்தவெளி. புரட்டாசி வெயில் கள்ளென்றோ, பளீரென்றோ மேலே அடித்துக் கொண்டிருந்தது. பால் கார்டை எடுத்துக் கொண்டு வருபவர் கிளம்பிக் கொண்டிருக்கிறார் என்றார்கள். சகுனம் பார்த்துக்கொண்டிருந்தார் போலும். அப்போது ெ... அரசாங்க பஸ்கள் சென்று கொண்... அதில் சென்று கொண்டிருந்த சில... ர்களைக் கண்டதும் கையை ஆட்டிப் புன்னகை புரிந்து கொண்டே போனார்கள். ஒரு மோட்டார் வண்டியில் சென்ற நண்பர் சற்று வண்டியை நிறுத்தி விட்டு 'ஹல்லோ!' என்று கூறி விட்டுப் போனார். அவர் சாதாரணமாக வழியில் நண்பர்கள் யாராவது நின்று கொண்டிருப்பதைக் கண்டால் மிக வேகமாகச் செல்வது வழக்கம் — ஏற்றிக் கொண்டு போக வேண்டியிருக்குமோ என்று. அன்று நான் கியூவை விட்டுக் கிளம்ப மாட்டேன் என்று அவருக்குத் தைரியம்.

கார்டு நான்கு மணிக்குத்தான் வரும் என்றார்கள். பாவம் இருநூறு ஸ்திரீகளுக்கு மேல் கியூ வரிசையில் ஒரு மணி நேரத்துக்கு மேலாக நின்று கொண்டிருந்தார்கள். ஆண்கள் கியூ வரிசை அனுமார் வால்போல் நீண்டு கொண்டே போயிற்று. மிகவேகமாக மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்க ஓடி வந்தார் ஒருவர். அதே சமயம் நான் கியூவை விட்டுக் கிளம்பி இப்பால் வந்தேன், வீட்டுக்குப் போவதற்காக. அப்போது அந்த மனிதர் அவராக எனக்கு வந்தனம் சொல்லி விட்டு, ''எனக்கு இடம் விட்டதற்காக, இந்தாருங்கள்!'' என்று சில்லறையை நீட்டினார்.

கியூ வரிசையில் நிற்பவர்கள் எத்தனைபேர் தங்கள் தங்கள் காரியாலயங்களில் லீவு எடுத்துக் கொள்கிறார்களோ என்று எண்ணினேன். திடீரென்று ஒரு நாள் ஒரு பெரிய காரியாலயத்தைச் சேர்ந்த அ... த்தனை பேரும் சாமான்கள் வாங்குவதற்காக 'லீ... வாங்கிக் கொண்டு விட்டால் வேடிக்கையாயிரு... கும் என்று கற்பனை செய்து கொண்டேன்.

ஆனால் இப்போதெல்லாம் கற்பனைக்கு மெட்டாத சம்பவங்கள் உண்மையில் தினந்தோறும் நடைபெறுகின்றனவே.

மறு நாள் காலை தினசரிப் பத்திரிகைகளிலெல்லாம் ருசிகரமான செய்தி வெளியாகியிருந்தது:

**எர்ணாகுளம் முனிசிப... விட்டியில் வேலை பார்க்கு... எழுபத்தைந்து குமாஸ்தா... களும் ரேஷன் கார்டு வை... துக் கொண்டு அரிசி வாங்... வதற்காக லீவு எடுத்து... கொண்டு விட்டனர்.**

பர்மிட் — கோட்டா — லைசென்ஸ் ராஜ்ய... பதினாயிரக்கணக்கான பேரை மட்டுமே பாதிக்கிறது. 'ரேஷன் கார்டு' ராஜ்யமோ கோடிக்கணக்கான மக்களைப் பாதித்து அவர்கள் அன்றாட வாழ்க்கையைக் கசப்புற செய்து வருகிறது.

❀ ❀ ❀

விளம்பரங்களில் திருப்தியைக் காட்டு... முகம் என்னும் போது ஒரு பழைய கா... விளம்பரம் ஞாபகத்துக்கு வருகிறது. அந்த முகத்தை உடையவர் கால்ஸ்வொர்த்தியின் 'பீட்டர் பானை'ப் போன்று என்றென்றும் ஒரே வயதினராய், ஒரே தன்மையினரா... இருந்து வருகிறார். சுமார் கால் நூற்றாண்டுகளுக்கு, முன்னர் தோன்றியபோது எப்படி இருந்தாரோ அப்படியே இன்னும் இருந்து வருகிறார். விளம்பர உலக புருஷர்களுள் எனக்கு மிகவும் பிடித்தவர். அவ... தான் ஏர் இந்தியா விமானக் கம்பெனியா... போஷித்து வளர்த்து வரும், 'மகாராஜா'

அந்த மகாராஜாவின் இலவங்காய் மீசையையும், பிப்பாய் தொப்பியையும், கா... சராயையும் யாரும் இலேசில் மறந்துவி... முடியாது. மதுரை வீரன் முகத்தைப் போ... றிருக்கும் அவரது உருண்டையான முகத்தி... மனச் சந்துஷ்டியும், கள்ளங்கபடற்ற தன்மையும் பிரதிபலித்துக் கொண்டிருக்கும்.

இந்த விளம்பர புருஷனை சிருஷ்டி செய்தவர்கள் பழைய டாட்டா விமானக் கம்பெனியார். அரசாங்கம் விமானக் கம்பெனியை அவர்களிடமிருந்து வாங்கிக் கொண்ட போது இந்த விளம்பரச் சின்னத்தை கைவிட்டு விடுவார்கள் என்று பயந்தேன். சென்னையில் ஏர் இந்தியா கம்பெனி காரியாலயம் ஆரம்பிக்கப்பட்டபோது முதல் தி... னமன்றே அவனுடன் போய்ப் பார்த்தேன். மகாராஜா இருந்தார்!

— என். ஆர்

# உங்கள் கேசம் உதிருகிறதா?



**பொடுகு**

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.

### இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.





**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்ருக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினல் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1



**ப்யூர் சில்விக்ரீன்**

கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீர்படி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.



# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/64


TATA-FINLAY
TEA















# வேண்டாம் இந்த உத்தியோகம்



எஸ். பத்மாவதி

''ஜனனி!...... புத்தகத்தை எடு... படிக்கலாம்.''

''இப்போ வேண்டாம்மா! விளையாடணும்.''

''சரி...சரி.... மணி ஆறு அடிச்சாச்சு. இன்னும் என்ன விளையாட்டு அப்புறம். உங்க மிஸ்கிட்டே சொல்லிடுவேன்...''

ஜனனி வேண்டா வெறுப்பாகப் புத்தகப் பெட்டியுடன் என் முன் உட்கார்ந்தாள். பள்ளியில் ஜனனி மிகவும் பிற்போக்காக இருப்பதால் வீட்டில் நல்ல கவனத்துடன் பாடம் சொல்லித் தரும் உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டேன்.

ஜனனியின் அப்பா, ''தங்கம்! இதெல்லாம் உன்னால் முடியாது. உனக்குப் பொறுமையே போதாது. நீ டிகிரி வாங்கியிருப்பது உண்மைதான். நல்லதுக்குத்தான்.. ஆனால் ஜனனி உன்னிடம் அடங்கிப் படிக்க மாட்டாள். இந்த வருடம் பள்ளியிலேயே டியூஷனுக்கு ஏற்பாடு செய்து விடுவோம்'' என்றார்.

எனக்கு ஆத்திரம். 'கான்வென்டில்' சேர்த்து விட்டு மாதா மாதம் ஒண்ணும் இளாகக்கே இருபது ரூபாய் தண்டம் அழுவது போதாதென்று, மாதம் முப்பது ரூபாய் கொடுத்து டியூஷன் வைப்பதாவது! அப்பாடி!... மாதம் ஐம்பது ரூபாய் முதல் வகுப்புப் படிப்புக்கா? ஒன்றும் வேண்டாம். நானே பொறுமையாகச் சொல்லித் தருகிறேன்'' என்று டியூஷன் உத்தியோகத்தைத் தொடங்கி விட்டேன்.

புத்தகப் பெட்டியை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தாள் ஜனனி. ஆனால் அதைத் திறந்து புத்தகத்தை எடுக்கவில்லை.

''உம்...... நேரமாகிறது. புத்தகத்தை எடு...''

''உம்.... உம்.... நீதான் எடேன்....நான் மாட்டேன்.''

ஆரம்பத்திலேயே எனக்கு ஆத்திரத்தைக் கிளப்புகிறாள். அதை அடக்கிக் கொண்டு, ''சோம்பேறி! புத்தகத்தைப் பையிலிருந்து எடுப்பதுகூடக் கஷ்டமா? பிறகு எப்படிப் படிக்கிறது?'' என்று சொல்லிவிட்டு நானே புத்தகங்களை எடுத்தேன்.

''ஆமாம், இன்னிக்கு என்ன பாடம் எடுத்தார்கள்....?''

''இன்னிக்கா... இன்னிக்கு...'' என்று சோர்வாக ஆரம்பித்த ஜனனி திடீரென்று உற்சாகத்துடன், ''அம்மா! இன்னிக்கு எனக்கு ஒரு நயா பைசா கீழே கிடைச்சது'' என்று சொல்லிப் பெட்டியைக் குடைந்து பெருமையுடன் காசை எடுத்துக் காட்டினாள்.

''ஐயையோ! இது யாரு காசோ... நீ எடுத்தின்டு வரலாமா?''

''யார் காசும் இல்லேம்மா. கீழே தனியா கிடந்தது.''

''கீழே யாராவது போட்டிருப்பா.... நீ எடுத்து டீச்சர் கிட்டே கொடுக்கணும். வீட்டுக்கு எடுத்துண்டு வரக் கூடாது.... உனக்கு வேணும்னு நான் காசு தரேன்....''

''பொய்! பொய்! நீதான் எனக்குக் காசே தர மாட்டேங்கிறியே. 'லாலி பாப்' வாங்கறதுக்கு.''

''குழந்தைகள் கையில் காசு தரக் கூடாது. உனக்கு என்ன வேணுமோ கேள். நான் கடையிலேயிருந்து வாங்கித் தரேன்.... இனி மேல் ஸ்கூலில் காசு கிடைச்சா டீச்சர்கிட்டே கொடுத்திடணும்... என்ன தெரிந்ததா?''

நயா பைசாவை எடுத்துப் பெட்டிக்குள் பத்திரப்படுத்தியபடி ஜனனி சரியென்று தலையை ஆட்டினாள்.

''சரி, சரி! படிக்க ஆரம்பிக்கலாம். இங்கிலீஷ் புத்தகத்தை எடு.''

நான் சொல்லுவதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே ஜனனி பெட்டியினடியில் எதையோ தேடிக்கொண்டிருந்தாள். எனக்குக் கோபம் வந்தது. அதை அடக்கிக் கொண்டு, ''என்ன ஜனனி! புத்தகத்தை எடுக்கச் சொன்னா நேரத்தை வீணாக்கிக் கொண்டு?''

''இரும்மா, பென்சிலும் பேப்பரும் எடுக்கிறேன்.''

''இப்போ பென்சில் எதுக்கு? எழுதும் போது எடுக்கலாம்.''

இதற்குள் பெட்டியிலிருந்து ஜனனி எடுத்த பென்சிலைப் பார்த்து என் மனம் திடுக்கிட்டது. அன்று காலைதான் ஆறணா கொடுத்துப் புதிதாக வாங்கிக்கொடுத்த பென்சில் தன் உருவம் தேய்ந்து இரண்டு அங்குல நீளத்தில் இரு பக்கமும் சீவப்பட்டுப் பரிதாபமாகக் காட்சியளித்தது.

ஆத்திரத்தில் உதடு படபடத்தது. வார்த்தைகளைக் கொட்ட. ஆனால் குழந்தைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுக்கப் பொறுமை மிகவும் அவசியம் என்று படித்திருந்தது நினைவுக்கு வந்தது. அடக்கிக் கொண்டேன் ஆத்திரத்தை. இருந்தாலும் குரலில் சிறிது கடுகடுப்புடன், ''இன்னிக்குக் காலையில் வாங்கித் தந்ததை அதற்குள் இப்படிச் சீவலாமா ஜனனி?'' என்று கேட்டேன்.

ஜனனி சிரித்துக் கொண்டே, ''இல்லேம்மா! நான் சீவல்லே! உமா இல்லே உமா, அவதான் புது ஷார்ப்னர் கொண்டு வந்திருந்தா. உன் பென்சிலைத் தாடி. சீவித் தரேன்னு வாங்கிண்டு நான் வேண்டாண்டின்னு சொல்லச் சொல்ல இப்படிச் சீவிட்டா....''

இது எவ்வளவு தூரம் உண்மையென்று எனக்குத் தெரியும்.

''சரி.... தொலையட்டும். புத்தகத்தைப் பிரி, படிக்கலாம்.''

ஜனனியின் காதில் இது விழுந்ததாகவே தெரியவில்லை. அவள் தன் கன்னங்களை உப்ப வைத்துக் கொண்டு.... பென்சிலின் முனையைத் தன் உப்பிய கன்னத்தில் குத்திக் கூர் பார்த்துக் கொண்டிருந்தாள். துறுதுறுத்த கண்களுக்கடியில் பள பளத்த கன்னங்கள் உப்பிய நிலையில்.....

எனக்குச் சிரிப்பு வந்தது. நானும் சிறு வயதில் அப்படிக் கன்னத்தில் பென்சிலைக் குத்திக் கூர் பார்த்தது நினைவு வந்ததும் என்னை அறியாமல் வாய் விட்டுச் சிரித்து விட்டேன்.

''ஏம்மா, சிரிச்சே?''

''ஒண்ணுமில்லே.... சும்மாத்தான்.''

''ஊஹூம்...இல்லே, என்னைப் பார்த்துத்தான் சிரிச்சே. எதுக்குன்னு சொல்லாட்டா.... நான் படிக்கல்லே....''

''என்னத்தைச் சொல்ல! நானும் உன் மாதிரிச் சின்னப் பெண்ணா இருந்தப்போ... இதுமாதிரி பென்சிலைக் கன்னத்தில் குத்திப் பார்த்தது ஞாபகம் வந்தது. உம். சரி, சரி! நேரமாகிறது. படி பார்க்கலாம்.''

''ஏம்மா, நீயும் சின்னப் பெண்ணா இருந்தியா?'' ஆச்சரியத்தினால் கண்கள் அகல விரிய ஜனனி கேட்டாள்.

''ஆமாம், இல்லாட்டா பிறக்கும்போதே இவ்வளவு பெரியவளாய் பிறந்தேனா என்ன? எல்லாரும் சின்னப் பாப்பாவா இருந்துதான் பெரியவளா ஆகிறா...''

''பாப்பா எப்படிம்மா பொறக்கறது?''

தூக்கிவாரிப் போட்டது எனக்கு. பேச்சு எப்படி வளர்ந்து எங்கு வந்து விட்டது என்று எண்ணும் போது.... -'குழந்தைகள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில்சொல்லாமல் மறைக்காதீர்கள். எதுவாக இருந்தாலும் வெளிப்படையாக உண்மையான பதிலைத் தெரிவியுங்கள். இதுவே குழந்தைகள் உள்ளத்தின் மலர்ச்சிக்கு அடிப்படை.'' — ஏதோ ஆங்கிலப் புத்தகத்தில் இதைப் படித்தது நினைவு வந்தது. ஆனால் ஒரு குழந்தை கேட்கிறது என்று வெளிப்படையாகச் சொல்லக் கூடிய விஷயங்களா இவை?..... எப்படிப் பேச்சை மாற்றுவது ? எண்ணம் முடிவதற்குள்...

ஜனனி, ''அம்மா, எங்க கிளாஸ் பாமாவுக்குத் தம்பிப் பாப்பா பிறந்திருக்காம்.''

நல்ல காலம்! நான் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டேன். கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை இப்போது எனக்கு.

''அப்படியா? ஒருநாள் போய்ப் பார்த்துட்டு வரலாம்.''

''அம்மா! அம்மா! ஏம்மா, எனக்குத் தம்பிப் பாப்பா பொறக்கல்லே?''

திரும்பவும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஆத்திரத்துடன், ''சரி, சரி! படிடன்னா என்னவோ வம்பு பேசிண்டு..... எடு புத்தகத்தை!'' அதட்டலாக வந்த குரலை மிகவும் சிரமப்பட்டு அடக்கி மெதுவாகக் கொண்டு வர நான் பட்ட பாடு ராமா.... ராமா!...

கோபத்தைப் புத்தகத்தின் மீதுதான் காட்ட முடிந்தது. அவசரமாக அதைப் பிரித்தேன். சலசல வென்ற சப்தத்துடன் அதிலிருந்து சிகரெட் காகிதங்கள் சிறகடித்துப் பறந்தன.

''ஐயோ!..... என் சில்வர் பேப்பர் போச்சே. சில்வர் பேப்பரெல்லாம் கசங்கிடுத்தே...'' என்ற அலறலுடன் ஜனனி தன் புத்தகத்திலிருந்து விழுந்த சிகரெட் பேப்பர்களைப் பொறுக்க ஆரம்பித்தாள்.

''சரி..... சரி.... இது வேறு தொல்லையா? போதும், வாயை மூடு. இதை யெல்லாம் புத்தகத்துக்குள்ளே தான் வைக்கிறதா? — அசிங்கம், புத்தகமே சிகரெட் நாத்தமா நாறறது. எடுத்து எறி, வெளியே!''

ஜனனி நான் சொன்னதை லட்சியமே செய்ய வில்லை. சில்வர் பேப்பர்களை சாவகாசமாகவும், ஜாக்கிரதையாகவும் பொறுக்கி எடுத்து அதிலுள்ள சுருக்கங்களை நிதானமாக நீவ ஆரம்பித்தாள்.

''நீ இப்போ இதைக் கீழே வைக்கட்டுப்படிக்க ஆரம்பிக்காவிட்டால் அத்தனையும் எடுத்துக் கசக்கிப் போட்டுடுவேன்.''

''எங்க டீச்சர் கைவேலை பண்ணறதுக்கு சில்வர் பேப்பர் கொண்டு வரச் சொன்னா.... அதுக்காக அண்ணா கிட்டே இருந்து வாங்கி வைச்சண்டிருக்கேன், தெரியுமா?''

''அண்ணாகிட்டே ஏதுடீ... சிகரெட் பேப்பர் ?''

''அண்ணாதான் தினமும் தன் ரூமிலே சிகரெட் பிடிக்



இருனே! ஐயையோ! சொல்லி விட்டேனு! அம்மாகிட்டே சொல்லாதேடீ... அப்புறம் உனக்கு ஒரு சில்வர் பேப்பர்கூடத் தர மாட்டேன்னு சொன்னுள்."

திடீரென்று எனக்கு ஆத்திரம் அதிகமாயிற்று. வீட்டில் எனக்குத் தெரியாத ஒரு விஷயம் இந்த நண்டுக்குத் தெரிந்திருக்கிறது. என் ஆத்திரத்தைக் காட்ட இதுவல்லசமயம். எனக்கு இந்த விஷயம் தெரியாதென்று இவளுக்குத் தெரியலாமா?

"ஏய்! இப்போ படிக்கிறயா? அல்லது..,"

என் ஓங்கிய கையைப் பார்த்து விட்டுக் கண்களில் சிறிது பயம் தோன்றப் பரிதாபமாகப் பார்த்தாள் ஜனனி.

அடித்தால் படிப்பு வருமா? என் கோபத்தை எண்ண எனக்கே வெட்கமாக இருந்தது.

"சரி.... சரி.... ஏ... பி... ஸி...சொல்லு பார்க்கலாம்"

உற்சாகமாக ஆரம்பித்தாள் ஜனனி.

"ஏ பி ஸி டி .... கருப்பன் தாடி....!"

"சீ, கழுதை! நிறுத்து. யார் கிட்டேயிருந்து இதை யெல்லாம் கத்துண்டே?

இந்தா! இதை எழுதிக் காட்டு. பார்க்கலாம்."

புத்தகத்தை எடுத்துக் கொண்டு தரையில் உட்கார்ந்து எழுத ஆரம்பித்தவள், சிறிது நேரத்தில் நன்ருகக் கால்களை நீட்டிப் படுத்துக் கொண்டாள்.

எனக்குச் சிரிப்பு வந்தது. சிரமப்பட்டு அதை அடக்கிக் கொண்டு புத்தகத்தைப் பிரித்து அவள் முன் வைத்தேன்.

"சரியா எழுந்து மேஜை மேலே புத்தகத்தை வைத்துக் கொண்டு படிக்கணும். இல்லா விட்டால் கண் கெட்டுடும், எழுந்திரு."

"கண் கெட்டுட்டாக் குருடியாயிடுவானா?"

"சேச்சே! அதெல்லாம் இல்லே. அப்புறம் கண்ணாடி போட்டுக்கணும்."

"போட்டுக்கறேனே...."

"அதிகப் பிரசங்கி! கண்ணுடி போட்டுண்டா கண் சரியாத் தெரியாது. அப்புறம் விளையாட முடியாது."

"அப்பா கண்ணுடி போட்டிண்டிருக்காளே. அப்பாவுக்குக் கண் சரியாத் தெரியாதா?"

"அப்பா பெரியவர் போட்டுக்கலாம்....? நீ சின்னவள். இப்பவே கண்ணுடி போட்டுண்டா எப்படி ஓடி ஆடி விளையாடறது?"

"ஓ! கண்ணுடி போட்டுண்டிருக்கிறதிலுலேதான் அப்பா ஓடிப் பிடிச்சு விளையாடறதில்லேயா? நீ கண்ணுடி போட்டுக்கலேயே, நீ ஏன் ஓடிப் பிடிச்சு விளையாடக் கூடாது?"

"நானு.... நான்.... ஓடிப் பிடிச்சு விளையாடிண்டிருந்தா உனக்கு யார் சமைச்சுப் போடுவானாம்....?"

"சமையல்காரி வைக்கறிது!"

"சரி, சரி! உன்கிட்டேதான் யோசனை கேட்கணும். படிப்பில் ஓர் அட்சரம் தெரியாது. இதெல்லாம் நன்ருத் தெரியும். உம்...: எழுது.... மரம்.... மரம்."

பென்ஸிலை அழுத்தி வைத்து 'ம' எழுதினுள்.

'படக்' — முனை உடைந்து விட்டது. எழுத ஆரம்பித்து விட்டாள் என்று மகிழ்ந்த என் எண்ணத்தில் மண் விழுந்தது. கோபம் பொங்கி வந்தது. என்ன அழும்பு! முனைத்து மூணு இலை விடலே. அதற்குள் என்னையே அதிகாரம் பண்ணறதே! படிப்புச் சொல்லிக் கொடுக்கும் வேலை மட்டும் இல்லை என்ருல்...எக்கேடாவது கெட்டுப்போ—என்று சொல்லி விட்டு எழுந்து போய் விடலாம். ஆனுல்.........இவ்வளவு கூடப் பொறுமை இல்லா விட்டால் குழந்தைக்குப் பாடம்



எப்படிச் சொல்லிக் கொடுப்பது என்று என்னை மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டேன்.

'விக்னேசுவரா! இனிமேல் ஒரு விக்னமும் நேராமல் என் குழந்தை படிக்க நீதான் அருள் செய்ய வேண்டும்' — ஒருகணம் கண்களை மூடி விக்னேசுவரரிடத்தில் விண்ணப்பித்துக் கொண்டபின் கண்களைத் திறந்தேன்.

"என்ன ஆச்சரியம்.....!"

ஜனனி தானுகவே படிக்க ஆரம்பித்து விட்டாளோ என்று எண்ணுகிறீர்களா? அது தானே இல்லை.... அவள் அந்த இடத்திலேயே இல்லை. மறைந்து விட்டிருந்தாள். மறைந்தவள் திரும்பவும் எங்கு 'காட்சி' தருகிறுளோ என்று கண்களைச் சுழல விட்டேன்.

'ரேடியோ'வினருகில் நின்று அதைத் திருகியபடி காட்சியளித்தாள். அர்ச்சனையை ஆரம்பித்தேன்.

"சீ.... கழுதை! எங்கேடீ.... ஓடிட்டே? வா, இப்படி....."

"அம்மா! அம்மா! 'ஒரே ஒரு ஊரிலே ஒரே ஒரு ராஜா' பாடறதும்மா.... அதை மட்டும் கேட்டு விட்டு....."

பக்கத்து விட்டு ரேடியோவில் அந்தப் பாட்டு அலறுவது அப்பொழுதுதான் என் காதில் விழுந்தது. அதற்குள் எங்கள் வீட்டு 'ரேடியோ'விலும் அந்தப் பாட்டு அலற ஆரம்பித்தது.

'சீ.... அண்டை அயலாருக்குத் தொந்தரவாக இருக்குமே என்ற எண்ணம் வேண்டாம். கொஞ்சம் சிறிதாகத்தான் ரேடியோவை வைத்தால் என்னவாம்? அது அலறக் கொண்டுதானே இவள் காதில் விழுந்தது?' —பக்கத்து விட்டுக்காரர்கள் மேல் எனக்கு ஏற்பட்ட எரிச்சல் கொஞ்ச நஞ்சமல்ல. ஆத்திரத்துடன் ஜனனியைப் பார்த்தேன். ரேடியோவுடன் சேர்ந்து பாடிக் கொண்டே ஜனனி அதற்குத் தகுந்தாற் போல நடனமாடிக் கொண்டிருந்தாள்.

'பாவம்! ஆடிப் பாடித் திரியும் வயதில்... கட்டிப் போட்டுப் பிராணனை வாங்கினுல் எப்படிப் படிக்கும்?' ஒரு நிமிடம்தான் இந்தச் சிந்தனை.... அடுத்த கணம்.... 'அப்பப்பா! இவள் வயதில் குழந்தைகள் எவ்வளவு நன்ருகப் படித்து...... பள்ளியில் பரிசுகளைத் தட்டிக் கொண்டு போகிருர்கள்.... பரிசு வாங்கா விட்டாலும்....' என் சிந்தனை அறுபட்டது.

"சரி... சரி... பாட்டு முடிந்து விட்டது. ரேடியோவை மூடு...."

அதற்குள் அடுத்த பாட்டு ஆரம்பமாகி விட்டது. ஜனனி ரேடியோவை மூடி விட்டு வராமற் போகவே, நான் பாய்ந்து சென்று ரேடியோவை நிறுத்தினேன். 'பட்'டென்று ஓர் அடி ஜனனியின் முதுகில் வைத்தேன். கையை ஓங்கின வேகத்துக்கு அடி அவள் மேலே படவில்லை. அடி என்னவோ லேசாகதான்.......ஆனாலும் என் கைபட்டதும், பெரிய பிரளயமே ஏற்பட்டுவிட்டது.

ஆம், வீடே கிடுகிடுக்கும்படி அலற ஆரம்பித்தாள் என் பெண் ஜனனி.

வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும்—சமையல்காரர், தோட்டக்காரர், நாய் ஜிம்மி உட்பட எல்லோரும் அங்கு கூடி விட்டனர்.

ஜனனியின் பாட்டி மூந்திக் கொண்( "போரும்மடீம்மா, நீ குழந்தைக்குப் படிப்பு சொல்லிக் கொடுக்கும் லட்சணம்! அதை போட்டு அடித்துக் கொல்லாதே" என்றுள்

தோட்டக்காரன் அதற்குள்.... அவளை தூக்கித் தோளில் சாய்த்துக் கொண்டு, "சி ணம்மா! புள்ளே படிக்கலேன்னு போட் அடிப்பார்களா? புள்ளே கன்னமெல்லா கன்னிப் போச்சுங்களே...." வெகு வருட களாக வேலை செய்யும் கிழவன்....அவனுக் உரிமை உண்டு.... கேட்டு விட்டான்.

என் கணவர் மெதுவாக என் காதருகி வந்து, "என்ன தங்கம்! நான் அப்ப சொன்னேனே, கேட்டாயா? உனக்கு பொறுமை போதாது. பணம் போன போகட்டும். டியூஷன் வைக்கலாம்னு..... என்றூர்.

என்னுள் எரிமலை குமுறிற்று— "ஒரு சிற அடி, அதற்கு இவ்வளவு ஆர்ப்பாட்டமா...

அதற்குள் என் மாமானூர், "குழந்தைக அடிச்சால் படிப்பே வராமல் போயிடும்மா. குழந்தைகள் அப்படித்தான் இருக்கு அந்தக் காலத்துலே இவன் (என் கணவன காட்டி) என்ன அழும்பு பிடிப்பான் படிக்கறதுக்கு....."

'அப்பாவைப் போலத்தான் பெண்ணு என்று மனத்திற்குள் நினைத்துக் கொ டேன். வெளியில் சொல்ல முடியுமா?

ஆத்திரத்துடன் ஆரம்பித்தேன். "சின் தாக ஒரு தட்டுத் தட்டினேன். அதற்கு இ ஆர்ப்பாட்டம் செய்து விட்டாள். அ நிஜம்னு நம்பிண்டு நீங்களெல்லாம்..... துக்கத்தினுல் எனக்கு மேலே பேச மு வில்லை.

நான் சொன்னதை யாரும் நம்ப வில் என்பது அவர்கள் முகத்திலிருந்து தெரிந்த ஜிம்மிகூட என்னை ஒரு மாதிரியாக முறைத்து பார்ப்பதாக எனக்குத் தோன்றியது.

உள்ளக் குமுறலுடன் என் அறைக்கு சென்று என் முகத்தைத் தலையணை புதைத்துக் கொண்டேன்.

"அம்மா.....! அம்மா.....!" முதுகி சின்னக் கை வருடிற்று.

ஆத்திரத்துடன் திரும்பிப் பார்த்தே கையில் 'லாலி பாப்'புடன் வாயிலிருந் எச்சில் வழிந்து சட்டையெல்லாம் சா கோலமிட ஜனனி நின்று கொண்டிருந்தா

"அம்மா! தாத்தா வாங்கித் தந்தா."

"தந்தாளோன்னே! போய்த் தின்னு போ.....!"

"ஏம்மா, கோபமா? காதோட ஒன்னு சொல்றேன்? நீ அடிச்சது கொஞ்சங்கூ வலிக்கல்லே..... சும்மாத்தான் கத்தினே உங்கிட்டே மாத்திரம் ரகசியமா சொல்ல டேன். அவாள்ளாம் எனக்கு வலிச்சதுன் நெனச்சுண்டிருக்கட்டும்.... என்ன?"

என்னை அறியாமல் நான் 'களுக்'கென் சிரித்து விட்டேன். என் துக்கம், ஆத்திர அழுகை எல்லாம் மறைந்து விட்டன. கள் மில்லா வெள்ளை உள்ளத்தைப் புரிந்து கொ ளாத ஜடமா என்ன, நான்?

## தொழில் நினைவுகள்

# காக்கி உடுப்பும் கடமை வழியும்

அமைதி கொஞ்சும் கஞ்சத்திலும் அதிர் வேட்டு வெடிகள் தயாரிக்கும் சிவகாசிப் பகுதியிலும் பகைமை நிறைந்த கிருஷ்ண கோதாவரிப் பிரதேசங்களிலும் பரந்து கிடக்கும் சென்னை நகரிலும் தலைநகர் டில்லியிலும் தவம் கிடக்கும் குமரியின் தாளடிப் பிராந்தியத்திலும் கடமை வீரராகப் போலீஸ் துறையில் பல படிகளில் உத்தியோகம் பார்த்து விட்டு, இப்போது ஓய்வுபெற்றிருக்கும் திரு எஸ். பார்த்தசாரதி ஐயங்கார் காட்சியில் எளியவர்; பேச்சில் இனியவர்.

அவரைச் சந்திக்க வந்த காரணத்தைச் சொன்னதும், ''எந்தத் தொழில் நினைவுகளைக் கேட்கிறீர்கள்?'' என்றார் சிரித்துக் கொண்டே. தொடர்ந்து அதிக நேரம் வியப்புக்கு ஆளாக்காமல், ''நான் ஒரு காலத்தில் வக்கீல் துறையில் புகுந்தேன். அதுவும் காலஞ்சென்ற மேதை அல்லாடி கிருஷ்ணசாமி ஐயரிடமே பயிற்சி பெற்றேன். இது தெரியுமோ?'' என்றார்.

''உங்கள் கருப்புக் கோட்டு நினைவுகளை விட காக்கி உடை நினைவுகளையே கேட்க விரும்புகிறேன்'' என்றேன் நான்.

திருவல்லிக்கேணி ஹிந்து உயர்நிலைப் பள்ளி, திருச்சி நேஷனல் உயர்நிலைப் பள்ளி, திருச்சி செயின்ட் ஜோசப் கல்லூரி முதலிய கட்டங்களைத் தாண்டி அவர் பி. ஏ. பட்டம் பெற்ற போது சர்வகலாசாலையிலேயே கணித பாடத்தில் முதல் மாணவனாக விளங்கினார். சட்டக் கல்லூரிப் பிரவேசம் தொடர்ந்து நடந்தது. பி. ஏ. வேகம் பி. எல். பரீட்சையிலும் இருந்தது. முதல் வகுப்பில் முதல் மாணவன் மீண்டும். 1926ம் ஆண்டில் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரிடமே வக்கீல் தொழில் பயில சிஷ்யராக வந்து சேர்ந்தார். அந்தச் சூட்டிலேயே எம். எல். பரீட்சையிலும் சர்வ கலா சாலையில் முதல் மாணவனாகத் தேறிவைத்தார்.

தொழிலில் திசை மாறும் கட்டம் வந்தது. அவருக்கு வழக்கறிஞராகவே இருந்துவிடத்தான் ஆசை. ஆனால் உறவினர்கள் வற்புறுத்தலின் மேல் 'இண்டியன் போலீஸ் சர்வீஸ்' என்று அழைக்கப்படும் போலீஸ் துறை உயர் அதிகாரிகள் தேர்வுக்கான பரீட்சைக்கு அவர் உட்கார்ந்தார். காலம் சென்ற டாக்டர் சுப்பராயனும் இதற்குப் பெருமளவில் பொறுப்பாளி.

திரு பார்த்தசாரதிக்கும் பரீட்சை வெற்றிக்கும்தான் நெருங்கிய உறவாயிற்றே! வழக்கம் போல் இந்தப் போட்டிப் பரீட்சையிலும் அந்த ஆண்டில் அவருக்குத்தான் முதல் இடம்.

பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியன் சிவில் சர்வீஸ் துறையில் பாதியை ஆங்கிலேயர்களுக்கும் பாதியை இந்தியர்களுக்கும் ஒதுக்கியது. ஆனால் போலீஸ் துறையில் அத்தனை தாராளம் காட்ட அது தயாராயிருக்கவில்லை. நாட்டில் அமைதிப் பராமரிப்புப் பொறுப்பை அவ்வளவு தூரம் இந்தியர்களிடம் நம்பி விட அஞ்சி, மூன்றில் ஒரு பங்கை இந்தியர்களுக்கும் இரண்டு பங்கை ஆங்கிலேயர் தங்களிடமுமே வைத்திருந்த காலம் அது. திரு பார்த்தசாரதி அந்த ஒரு பங்கில் ஒருவராக நுழைந்து விட்டார்.

அப்போதும் • அவர் முழு மனத்துடன் நுழையவில்லை. ''வெப்பு ஜரிகைத் தலைப்பாவை வைத்துப் பார்ப்போம்! தலைக்கு சின்னதாகவோ பெரிதாகவோ இருந்தால் கழற்றி வைத்து விட்டுப் பழைய கருப்புக் கோட்டில் புகுந்து விடலாம்'' என்ற எண்ணத்தோடுதான் உதவி போலீஸ் சூப்பிரெண்டெண்ட் பதவியை ஏற்றுக் கொண்டார். ஆனால் கடைசி வரை போலீஸ் துறை அவரை வெளியே போக விடாமல் தன்னிடமே வைத்துக் கொண்டு விட்டது.

முதன் முதலாக அவர் கடப்பை மாவட்டத்துக்கு அனுப்பப்பட்டார். ஜமால்மடுகு அவரை வரவேற்றது? நிறைய அனுபவத்தையும் அளித்தது.

விரோதத்தின் காரணமாக ஒரு நபர்மீது பழி சுமத்தி விருப்பதாக ஒரு ரிப்போர்ட். பழி சுமத்தப்பட்டவர் படுத்த படுக்கையாக உயிருடன் போராடிக் கொண்டிருந்தாராம். அந்த நிலையில் அவர் பிரஸ்தாபக் குற்றத்தைச் செய்யக் கனவிலும் நினைத்திருக்க முடியாது என்று மனு.

புதுப் போலீஸ் அதிகாரி இளைஞர். அவருக்கு ரிக்கார்டுகளைப் பார்த்தே கேஸ்களைப் பற்றி முடிவு காண அனுபவம் போதாது என்ற நினைப்போ என்னவோ? யாரிடமும் சொல்லாமல்



திரு எஸ். பார்த்தசாரதி ஐயங்கார்

திடீரென்று ஒரு நாள் அந்த அபாண்டப் பழியைத் தாங்கிப்படுத்த படுக்கையாகக் கிடக்கும் நபரைப் பார்க்கப் போனார். இவர் இப்படி வந்து நிற்பார் என்று அந்த மனிதர் கண்டாரா? வாசலில் உதவி போலீஸ் சூப்பிரண்டெண்ட் பார்த்தசாரதி அவர்களைக் கண்டதும் அந்த மனிதர் உள்ளே ஓடிப்போய் கட்டிலில் படுத்துப் போர்வையை இழுத்து மூடிக்கொண்டு தேவைக்கு அதிகமாகவே முனகினாராம்!

அப்புறம் இப்படிப்பட்ட அபாண்டப் பழிக் கேஸ்கள் என்றாலே திரு பார்த்தசாரதிக்கு ஆராய்ச்சி எண்ணம் அதிகரித்தது.

மற்றொரு ருசிகரமான வழக்கு. ஒரு ஜில்லா போர்டு மெம்பர். கைத் துப்பாக்கி வைத்துக் கொள்ள அவர் அனுமதி பெற்றிருக்கவில்லை. ஆனாலும் ஒரு கைத் துப்பாக்கியை வைத்திருந்தார். அந்தப் பொல்லாத கைத்துப்பாக்கி சமய சந்தர்ப்பம் தெரியாமல் விளையாட்டாக வெடித்து வைத்து அடுத்த வீட்டு மாப்பிள்ளைகளில் ஒருவர் மீதே பாய்ந்து உயிரைப் போக்கி விட்டது. அது அந்த வட்டாரத்திலேயே பரபரப்பான சம்பவமாகி விட்டது.

அரசியல் ரீதியில் அந்த ஜில்லா போர்டு மெம்பர் நிறைய பக்கபலமுள்ளவர்... ஆகவே விபத்து நடந்த வேளையில் அவர் பல மைல் தூரத்திற்கப்பாலுள்ள ஓர் ஊரில் ஜில்லா போர்டு கூட்டத்தில் கலந்து கொண்டிருந்தார் என்று மற்ற அத்தனை அங்கத்தினர்களும் ஏகமனதாக ஒரு திடீர் உண்மையைக் கூறித் தங்கள் சகமெம்பரை இக்கட்டிலிருந்து விடுவிக்க முன்வந்தார்கள். அந்த மெம்பரும் கோர்ட்டில் குற்றவாளி இல்லை என்று விடுவிக்கப்பட்டார்.

அந்த நாட்களில் அந்தப் பிராந்தியத்தில் குற்றங்கள் மலிந்திருந்தன. போலீஸ் ஸ்டேஷன்களுக்கு முன் அறிவிப்புக் கொடுத்து விட்டே குறிப்பிட்ட குற்ற பரம்பரையினர் கொள்ளையும் கொலையும் நடத்தி வந்த காலமும்கூட! 'யார் புகார் கொடுப்பவர்? யார் குற்றம் செய்தவர்?' என்பது உள்ளூர்ப் போலீஸ்காரர்களின் அனுதாபமும் அபிமானமும் யார் பக்கம் இருக்கிறது என்பதைப் பொறுத்துத்தான் முடிவு செய்ய வேண்டிய நிலையில் இருந்தது.

மற்றொரு ரசமான சம்பவமும் இந்த நாட்களில் அங்கு நடந்தது. கொலை செய்யப்பட்டு அனாமத்தாக அடையாளம் தெரியாமல் கிடந்த ஒரு நபருக்கு மற்றொரு நபரின் பெயரைச் சூட்டிப் பின் நபருக்குச் சேர வேண்டிய இன்ஷூரன்ஸ் பணத்தைக் கோரி ஒரு மனு தாக்கல் செய்யப்பட்டது. இதை முன்னணியில் நின்று செய்தவர் ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டர். வெண்ணெய் திரண்டு வரும் போது தாழி உடைத்த கதையாக கடைசி கட்டத்தில் ஒரு நாள், கோர்ட்டு விசாரணையின் போது இறந்து போனதாகச் சொல்லப்பட்ட நபர் வேடிக்கைப் பார்க்கக் கோர்ட்டுக்குள்ளேயே வந்து விட்டார். அதுவே அந்த சப் இன்ஸ்பெக்டருக்கு வினையாக வந்து சேர்ந்தது. வகையாக மாட்டிக் கொண்டார்!

இந்த ரகத் துணிவான குற்றங்கள் எல்லாம் தன் காலத்தில் அங்கு குறைந்து வருவதைக் கண்டு திரு பார்த்தசாரதிக்குத் திருப்தி ஏற்பட்டது. அப்படிப்பட்ட பிராந்தியத்திலிருந்து மாற்றுதலைத் தானாகக் கேட்காத ஒரே போலீஸ் அதிகாரி என்று அவர் இன்ஸ்பெக்டர் ஜெனரலினால் பாராட்டப்பட்டார்!

சுதந்திரப் புரட்சியின் ஆணி வேராக விளங்கிய உப்பு சத்தியாக்கிரக நாட்களில் திரு பார்த்தசாரதி சிவகாசிப் பகுதிக்கு வந்து சேர்ந்தார். அரசியல் கொந்தளிப்பு நிறைந்த நாட்கள். மறியல்களும் போலீஸ் ஜுலுமும் மிகுந்திருந்த காலம். அகப்பட்டவர்கள் மீதெல்லாம் ஏதாவது ஒரு குற்றத்தைச் சாட்டி உள்ளே தள்ள அந்த நாளைய அரசாங்கம் துடித்துக் கொண்டிருந்தது.

இந்த வேளையில்தான் விருதுநகர் தபாலாபீஸ் மீது குண்டு வீசப்பட்டது. அமளிதுமளி. சென்னையிலிருந்து வந்த துப்பறிபவர்கள் அவசரம் அவசரமாக இன்று பாரதத்தின் பிரதான அரசியல் பிரமுகராக விளங்கும் அன்றைய இளைஞர் ஒருவர் மீது குண்டு வீச்சுக் குற்றம் சாட்டி ரிப்போர்ட் கொடுத்தார்கள். திரு பார்த்தசாரதிக்கு அந்தப் பிராந்தியத்தின் அரசியல் நிலவரங்களும் ஊழியர்களின் நடவடிக்கைகளும் நன்கு புரிந்தவை. ஆகவே துப்பறிபவர்கள் கொடுத்த ரிப்போர்ட்டை ஏற்க மறுத்து விட்டார். அதில் உண்மைக்குப் பதில் அவசரம் மிகுந்திருக்கிறது என்பது தான் காரணம். அந்த இளைஞரைப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்தான் கொண்டு வர முடிந்தது. அதைக்கூட நிராகரித்து விடுதலை செய்து விட்டார் அந்த நாளைய சப் கலெக்டர் ஒருவர்! அன்றைய இளைஞர் வேறு யாருமில்லை! இன்றைய காங்கிரஸ் அக்கிராசனர் திரு காமராஜ்தான்!

அழகும் அமைதியும் நிறைந்த கஞ்சம் மாவட்டத்திலும் திரு பார்த்தசாரதிக்கு ஏறத்தாழ இப்படி ஓர் அனுபவம் கிடைத்தது. முடிவில் கொஞ்சம் மாறுதல்!

பெரும் நிலக் கிழார்களுக்கு எதிராக அங்கு திரு வி. வி. கிரி கிளர்ச்சி நடத்தத் தொடங்கிய காலம். ஜமீந்தார்களை ஒழிக்கக் கிளம்பிய போராட்டம். பெரும் நிலச்சுவான்தார்களின் தூண்டுதல் பேரில் போலீஸார் திரு கிரியின் மீது குற்றப் பத்திரிகை தாக்கல் செய்தார்கள். அரசியல் காரணங்கள் உண்மையை மூடி மறைத்தன. திரு பார்த்தசாரதி அந்தக் குற்றச்சாட்டுகளை ஏற்றுக் கொண்டு நடவடிக்கை எடுக்கத் தயாராயில்லை. மறுத்து விட்டார்.

ஆனால் அவருடைய மேலதிகாரிகள் நடவடிக்கை எடுத்தார்கள். கஞ்சம் மாவட்ட ஜில்லா போலீஸ் சூப்பிரண்டெண்ட் திரு பார்த்தசாரதியை உடனடியாக ஆத்திரத்தினால் தென்னார்க்காடு மாவட்டத்திற்கு மாற்றினார்கள். அங்குதான் அவர் 'ரிக்கார்டு'களில் மாத்திரம் நிறுவப்பட்டிருந்த 'உஷார்கமிட்டி'களைக் கண்டார். உண்மையில் செயல்படும் ஒரு உஷார் கமிட்டிகூட இல்லை!

திரு பார்த்தசாரதியின் சேவையை இரவலாக நான்கு ஆண்டு காலம் பெற முன் வந்தது அந்த நாளைய திருவாங்கூர் அரசாங்

கம். திருவாங்கூர் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலாகப் பதவி ஏற்றிருந்த சுமார் நான்கு வருட காலத்தின் நினைவுகள் அவருடைய உள்ளத்திலே என்றும் மாருத பசுமை வண்ணம் பெற்று விட்டன. அந்தப் பிராந்தியத்தின் இயற்கை வளமும் மக்களின் சுறுசுறுப்பும் அங்கு உயர் அதிகாரிகளுக்கு மக்களையும் சூழ்நிலைகளையும் அறிந்து கொள்ளக் கிடைத்த வாய்ப்பும் அவருக்கு மிகுந்த பிரமிப்பை ஊட்டின.




"இன்று மாலை சபாவில் ஒரு கச்சேரி! மிருதங்கத்திற்கு கொஞ்சமாவது ரவை தாருங்களேன்!"

சிப்பந்திகள் வரம்புக்கு மீறி நடந்து கொண்டு விட்டார்கள் என்ற சந்தேகம் எழுந்தது. அந்த ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர் மீதே குற்றம் சாட்டி நீதி மன்றத்திற்கு அனுப்பிவிட்டார். நல்ல வேளையாக அந்த இன்ஸ்பெக்டர் தண்டனை இன்றித் தப்பினார்.

"போலீஸ் ஸ்டேஷன் ஒரு கோவில் போல. அங்கு யாரும் அடைக்கலம் புகலாம். நல்லவர்களும் வரலாம். தீயவர்களும் வரலாம். அவர்கள் நல்லவர்களா இல்லையா என்பதை நீதிமன்றம் தான் சொல்ல வேண்டுமே தவிர நீதி வழங்கும் பொறுப்பை ஒருநாளும் போலீஸார் தங்கள் கையில் எடுத்துக் கொள்ளக் கூடாது" என்று சற்று அழுத்தமாகவே கூறினர் திரு பார்த்தசாரதி.

அவருக்கு அந்த வாய்ப்பை அளித்தவர் அன்றைய திருவாங்கூர் சமஸ்தான திவான் சர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர். அதே சர் ஸி. பி. தான் ஆரம்ப நாட்களில் திரு பார்த்தசாரதி போலீஸ் துறை போட்டிப் பரீட்சைக்கு உட்காருவதையே விரும்பாமல் இருந்தவர்!

1953ல் திரு பார்த்தசாரதி சென்னை நகரப் போலீஸ் கமிஷனர் பதவியை ஏற்றார்.

தேனாம்பேட்டைப் பகுதியில் ஒரு ரௌடி. அவன் நினைத்தபோதெல்லாம் சோடா பாட்டில்களை வீசி உடைத்துக் கலாட்டா செய்து வந்தான். அந்தப் பகுதி மக்களுக்கு அவனைக் கண்டாலே பயம். போலீஸ்காரர்களுக்கும் அவன் பெரிய கேடி என்று தெரியும். ஆனாலும் சும்மா இருந்தார்கள்.

புதுக் கமிஷனர் காதுக்கு இந்த விஷயம் எட்டியது. அந்தப் பகுதிக்குப் பொறுப்பேற்றிருந்த உதவிக் கமிஷனரைக் கூப்பிட்டு விசாரித்தார். அவர் பதில் திருப்தியளிக்கவில்லை. "சரி! இந்த விவகாரத்தை நான் நேரடியாகக் கவனித்துக் கொள்கிறேன்" என்று தீர்மானமாகச் சொல்லி அனுப்பி விட்டார்.

மூன்றும் நாள் அந்த உதவிக் கமிஷனர் உள்ளே வந்தார். "சார்! அந்தக் கேடியை நேற்று உள்ளே தள்ளியாயிற்று. ஒன்பது மாதம் கோர்ட்டிலே போட்டுட்டாங்க" என்றார். இந்தப் பதில் கமிஷனருக்குக் கொஞ்சம்கூடத் திருப்தியளிக்கவில்லை.

"நீங்கள் செய்தது தப்பு! அவசர அடியாக ஏதோ சாட்சிகள் ஜோடனை செய்து நடவடிக்கை எடுத்து விட்டீர்கள். அவன் கலாட்டா செய்யும் போது காத்திருந்து போதுமான பொதுமக்கள் சாட்சிகளுடன் அவனைப் பிடித்துத் தண்டிப்பதுதான் முறை. ஏதோ என்னைத் திருப்தி செய்வதற்காக நீங்கள் அவசரப்பட்டிருப்பதை, அவன் பெரிய கேடியாக இருந்த போதிலும் என்னால் ஒப்புக் கொள்ள முடியாது" என்று கூறிவிட்டார்.

மற்றொரு சந்தேகத்திற்கிடமான ஆசாமி. போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்பில் நோயுற்றான். அவனை ஆஸ்பத்திரியில் அநுமதித்தார்கள். அங்கு அவன் மரணமுற்றான். கமிஷனருக்கு அந்தப் போலீஸ் ஸ்டேஷன்

அவர் சென்னைக் கமிஷனராகப் பணியாற்றிய காலத்தில் இரண்டு மாபெரும் சம்பவங்களில் பங்கெடுத்துக் கொண்டதைப் பெருமையுடன் நினைவுபடுத்திக் கொண்டார்.

ஒன்று ஆவடி காங்கிரஸ் நடந்த காலத்தில் போலீஸ் பந்தோபஸ்துக்கு அவர் பொறுப்பேற்றுக் கொண்டார். கற்பனைக்கும் அடங்காத அத்தனை பெரிய ஏற்பாடு. வெற்றியுடன் சமாளித்தார்.

இரண்டாவது சந்தர்ப்பம், குருஷேவ் புல்கானின் சென்னை விஜயம். "அப்போது கூடிய சென்னை மக்களின் கூட்டத்தைப்போல் அதற்கு முன்னும் பார்த்ததில்லை! பின்னும் பார்த்ததில்லை!" என்றார் அவர்.

அவருடைய சேவை மத்திய சர்க்கார் ரயில்வே இலாக்காவில் லஞ்ச ஒழிப்பு வேலைக்காகத் தேவைப்பட்டது! இன்ஸ்பெக்டர் ஜெனரலாகப் பதவி ஏற்று டில்லிக்குப்போய்ச் சேர்ந்தார். சூட்டோடு சூடாக, ஒன்பதரை வருடங்களாக ஒரு பெரிய ரயில்வே அதிகாரி சம்பந்தப்பட்டுத் தூங்கிக் கொண்டிருந்த லஞ்ச வழக்கை, எழுப்பி நிறுத்தி உடனடியாக முடிவு கட்டினர்.

1960ல் ஓய்வுபெற்றுத் திரும்பிய திரு பார்த்தசாரதி ஐயங்காரிடம் இன்றும் ஓர் இளைஞரின் சுறுசுறுப்பு காணப்படுகிறது. காரணம் ஆதிநாட்களில் திரு ஸ்ரீராமுலு திரு ராமாநுஜ ஐயங்கார் இருவரிடமும் அவர் பெற்ற பயிற்சிதான். அதே போல் இன்று போலீஸ் துறையில் உயர் அதிகாரிகளாக விளங்கும் பலருக்கு அவர் பயிற்சி அளித்திருக்கிறார்.

அவரிடம் விடைபெற்றுக் கிளம்பிய போது 'அவருடைய அநுபவங்களை சேகரித்தது போல் அவருடைய உற்சாகத்தையும் கொஞ்சம் சேகரிக்க முடியாமல் இருக்கிறதே' என்ற ஏக்கத்துடன் வெளிவர வேண்டியிருந்தது!

— கோமதி ஸ்வாமிநாதன்

மங்கள
தீபாவளிக்கு
மதிப்பு மிக்க

# பின்னி

துணியாலான
ஆடைகள்

ஆண்டு தோறும் பின்னி ஸ்தாபனத்தைச் சேர்ந்த மில்கள் 8½ கோடி மீட்டருக்கு மேல் தயாரித்து விற்பனை செய்யும் துணி ரகங்கள்:

| | |
|---|---|
| பருத்தி ஷர்ட்டிங்குகள் | [illegible], கிராண்டெல்லா, [illegible], [illegible], [illegible], டெரோஸ்லின் செக், விக்டர், [illegible], [illegible] |
| பருத்தி சூட்டிங்குகள் | [illegible] சூட்டிங் ட்ரில், Q551, கே காட்டன் [illegible], 8375 ட்ரில், டெனிம், [illegible], பெரோடா |
| 'காங்காத்தன்மை' ரகத்தில் பெண்கள் உடை, மற்றும் சூட்டிங் | [illegible], ஜாகுவார், ஆர்ட்லின், [illegible], [illegible] |
| பல்லின (டிரிபுடிமனா) துணிகள் | [illegible] |
| கம்பளி/பருத்தி | காட்ஸ்வால், அங்கோரா |
| 'டெரிலின்'/ பருத்தி | மால்பரோ சூட்டிங் |
| 'டெரிலின்'/ கம்பளி | வார்ஸிடி சூட்டிங் |
| 'டெரிலின்'/ விஸ்கோஸ் | புஷ் ஷர்ட்டிங் |
| தூய பட்டுகள் | [illegible], [illegible], [illegible], [illegible] மற்றும் '[illegible]' [illegible] பட்டுப் புடவை, ஷர்ட்டிங்கு, சூட்டிங்கு, வேஷ்டி, அங்கவஸ்திரம் |
| வீட்டில் உபயோகப்படும் துணிகள் | [illegible], போர் டவல்கள், [illegible] டவல், [illegible] |
| பல உபயோகத்திற்கான துணிகள் | [illegible], காக்கி மற்றும் சாயம் [illegible], [illegible] மற்றும் [illegible], [illegible] துணி, [illegible], [illegible], [illegible], H9 [illegible], [illegible] |
| [illegible] கைசெய்த துணிகள் | ஷர்ட்டிங்குகள், சூட்டிங்குகள், புடவை, லுங்கி, [illegible], டவல்கள், படுக்கை விரிப்பு, திரைகளுக்கும் [illegible] உறைகளுக்குமான துணிகள், [illegible], பாடிக் ப்ரிண்ட்ஸ், [illegible] துணி, மாட்டி — மற்றும் பல வகைகள் |

# பின்னி —

துணி
உலகிலே
புகழ்பெற்ற
பெயர்

BINNY'S FABRICS

BINNY & CO. LIMITED, MADRAS

உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் காணும் அனுமதிபெற்ற விற்பனையாளரிடமிருந்து கண்ட்ரோல் விலைக்கு வாங்குங்கள்.

**கவனிக்கவும்:** துணிகளை வெள்ளாவியில் வைக்காமல் ஜாக்கிரதையாக சலவை செய்தால் நீடித்து உழைப்பதுடன் சாயம் போகாமலும் இருக்கும்.

பக்கிங்ஹாம் & கர்னாடிக் கம்பெனி லிமிடெட்
பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
பின்னி & கம்பெனி லிமிடெட், மதுரா ஸ்தாபனத்தின் கிளைகள்

PIT/BY/2818A



# நவராத்திரி நாடகம்

[ நவராத்திரி — ஒரு நாள் மாலை. ஒரு வீட்டு வாயில் முன் ராமன் ஸ்கூட்டரை நிறுத்துகிறான். பின் பக்கத்து வீட்டிலிருந்து சகோதரி ராஜி இறங்கிப் புடவையைச் சரிசெய்துகொள்கிறாள்.]

ராஜி: நீயும் உள்ளே வாயேன்.

ராம்: அடியம்மா நான் வெறும் சாரதி தான்; அழைக்க வரும் ரதியோ, அழைக்கப் பட்ட அதிதியோ அல்ல. இங்கேயே ஸ்கூட்டருக்குக் காவலாக இருக்கிறேன். முந்தின வீட்டில் கொடுத்த சுண்டல் இருந்தால் கொடு. கொரித்துக் கொண்டிருக்கிறேன்.

ராஜி: சுண்டலா, சுண்டலுக்குக் கூடக் கிடையாது. எல்லோரும் வெற்றிலை பாக்கு பழத்துடன் சரி.

ராம்: சரிதான். தேங்காய் மூடிக் கச்சேரி கூட இல்லையா? ஏன், அழுத குழந்தைக்கு வாழைப் பழம் போல் உங்கள் கானத்தைக் கேட்டுவிட்டு எல்லோரும் கனிந்த பழத்தைத் தருகிறார்களோ?

ராஜி: விலைவாசி ஏற்றம்; அதனால் விநியோகத்தில் ஏமாற்றம்.

ராம்: நாரீமணிகள் தோற்றத்தில் மாறுதல் இல்லையே.

ராஜி: சரி கிடக்கு உள்ளே வா. இல்லாவிட்டால் எனது தோழி கமலா சாரதியை வெளியே விட்டு வந்த குற்றத்திற்காக ஒரு ஆவர்த்தனம் சண்டை பிடிப்பாள்.

ராம்: அதையே ஒரு நவராத்திரிப் பாட்டாக ஏற்றுக் கொண்டு விடு.

ராஜி: எதற்கும் பின்னணியாக நீ இரு.

ராம்: நீ போ, வருகிறேன்.

ராஜி (உள்ளே நுழைகிறாள்) இது என்ன அங்கத்தினர் இல்லாத சட்ட சபை போல இந்த வீட்டில் யாரையும் காணோமே.

பாலு: ஏன் சபாநாயகர் போல் நான் இங்கு கொலு வீற்றிருப்பது தங்கள் நயனங்களுக்குப் புலப்படவில்லையோ!

ராஜி: மிஸ்டர் நாயரா, நாயக்கரா? ஏன் ஸார், எங்கே கமலா?

பாலு: குமாரி நாயகி, கமலா மஞ்சள் குங்குமத் தேங்காய்க்காக ஒரு கூடையுடன் சென்றிருக்கிறாள். சாரி, பிளாஸ்டிக் கூடையுடன். இருந்த வாண்டும் அடுத்த வீட்டுக்குப் போயிருக்கிறது.

ராஜி: மிஸ்டர், இந்த நாயகி 'பா'வமெல்லாம் வேண்டாம். நான் கமலாவின் தோழி.

பாலு: ஓஹோ, வாராயோ தோழி. வந்தெங்கள் நவராத்திரி அழைப்புக் கார்டு பாராயோ?

ராஜி: ஏன் இதோ இருக்கு. அதிலே 'பிரின்டெர்ஸ் டெவிலா?' உம்மைப் பார்த்தால்தான்.

பாலு: டெவிலும் இல்லை; டேபிளும் இல்லை — மதிப்பிற்குரிய 'டேம்' ( Dame ) அவர்களே! இன்று இந்த வீட்டுக் கொலுவிற்கு 'டேட்' போட்டிருக்கிறதா?

ராஜி: டாமிட்! நெருங்கிய சிநேகிதி வீட்டுக்கு வரத் தேதி பார்க்க வேண்டுமா? தேதி போட்டால்தான் தர்பாரும் கொலுவுமா? அப்படியானால் இந்த வீதியில் உள்ளவர்கள் எல்லாம் கலந்து ஆலோசித்து ஒரு நாள் குறிப்பிட்டிருக்க வேண்டும். வீடு தோறும் ஒரு தேதியா?

பாலு: வீதி தோறும் ஒரு தேதி வேண்டுமா? இந்தச் சேதியைக் கமலா வந்தவுடன் ஓதுகிறேன்.

[வாசலிலிருந்து ஸ்கூட்டர் எருமைக் கன்றின் குரலில் அழைப்பு விடுகிறது.]

பாலு: பூஜை வேளையில் யார் இந்தக் கரடி? நாராசமாக....

ராஜி: மிஸ்டர், உமது குரலைவிட நன்றாக இருக்கிறது. நான் வருகிறேன்.

பாலு: அப்படிச் சொல்லக் கூடாது. அம்மணி. உள்ளே வந்து ஒரு பாட்டுப் பாடி..

ராஜி: பெண்ணில்லாக் கொலுவிற்குப் பண் வேறு?

பா: அதோ டேப் ரிக்கார்டர் இருக்கிறது. பாருங்கள். கமலா வந்தவுடன் போட்டுக் காண்பித்து விடுகிறேன்.

ராஜி: பாட்டுப் பாடவா? பாட்டுக் கேட்கவா ?

ராம் (பின்னால் வந்து): ரொம்ப ரைட் ; இந்த டிரான்ஸிஸ்டரைத் திருப்பி விடு. மை டியர் ஸிஸ்டர்.

பாலு: அடேடே! ராம்ஜியா, ஏண்டா பழி. இது உன்......

ராம்: எனது சகோதரி; அடியேன் சாரதி.

பாலு: அட பாவி, முன்பே சொல்லக் கூடாதோ ?

ராம்: ஏன் அன்போடு நடந்து கொண்டிருப்பாயோ? ராஜி, இவன் எனது நண்பன்.

பாலு: ஹி, ஹி, கமலா எனது தங்கை.....

ராஜி (நாணம் சேர): சரி, கமலா வந்தால் கட்டாயம் வரச் சொல்லுங்கள், எங்கள் வீட்டுக் கொலுவிற்கு.

பாலு: அழைப்பு அவளது அண்ணனுக்குக் கிடையாதா?

ராஜி: ஓ, தாராளமாக உண்டு. சேலை கட்டிக் கொண்டு வந்தால் வெற்றிலை பாக்குடன் 'ஜாம் ஜாம்' என்று....

பாலு: அப்படியானால் வாகனமோட்டியாக வந்தால் ஒன்றுமில்லையாக்கும்.

[ஸ்கூட்டரின் ஓலம்; அது கண்ணுக்கு மறையும் வரை பாலு பொம்மை போல நிற்கிறான்.]




### காட்சி – 2

*[ராஜியின் இல்லம். கமலாவும் அவளுடன் ஒரு பெண்ணும் நுழைகிறார்கள்.]*

ராஜி: வாடியம்மா வாடி! வழிதெரிந்ததா?

கமலா: ஏதடி சடுகுடுவிற்கு அழைப்பது போல் சவால் விடுகிறாய். நான் காவேரி மணலை மிதித்து வரவில்லை; காரிலே உடல் பதித்து வரவில்லை; ஆட்டோவில் ஆடிய படியே உன்னை நாடி வந்தேன்.

ராஜி: இல்லையடியம்மா, கொலுவிற்கு வருபவர்களை உபசரிக்க 'சப்ஸ்டியூட்' வைத்திருந்தாயே. இதர வீடுகளுக்குச் செல்லவும் 'ஸ்டெப்னி' வைத்திருக்கிறாயோ என்று பார்த்தேன்.

கமலா: ஸ்புட்னிக்குமில்லை, சட்னியும் இல்லை. அன்று அவசரமாக ஒரு வீட்டிலே அழைப்பு. சென்று வந்தேன். இவள் எங்கள் அத்தை மகள் ரத்தினமடி. துணைக்கு அழைத்துக் கொண்டு வந்தேன். அங்கே யாரைப் பார்க்கிறாய்?

ராஜி: ஏன்டி, உனக்குத் துணையாக உன் அண்ணா வரவில்லையா?

*(கண்களில் மருட்சி)*

கமலா: சரிதான், வந்தவர்களை வரவேற்கிற லக்கணை? வராத துணையை அக்கறையாகத் தேடுகிறாயே. அவனுக்குப் புடவை அகப்பட வில்லையாம். அதனால் வரவில்லை.

ராஜி: ரத்தினம், ஒரு பாட்டுப் பாடுங்களேன்.

ரத்: என்னைக் குரல் எடுத்துப் பாடச் சொல்லாதீர்கள். பிறகு எனது வண்ட வாளம் தெரிந்து விடும்.

கமலா: ரத்தினம் சும்மா வேஷம் போடாதே. ஒரு பாட்டுப் பாடு. எங்கண்ணாவுக்கு இவ குரல்னா உசிரு.

ரத்: போ, கமலா. என்னைக் கேலி பண்ணிவிட்டால் உனக்கு நவராத்திரியும் தூக்கம் வராது.

கமலா: அதற்குள் கண்ணீர் விடாதே. மேக்கப் கலைந்து விடும். பிறகு அண்ணா கோபித்துக் கொள்வான் மன்னி.

ராஜி: மன்னியா?

கமலா: மன்னித்து விடு ராஜி. இவள் தான் எங்கள் வருங்கால அண்ணி. தயவு பண்ணி எங்களை மஞ்சள் குங்குமம் தந்து அனுப்பு.

*[ராஜியின் முகத்தில் எள்ளும்கொள்ளும் வெடிப்பது கண்டு இருவரும் கண் சிமிட்டுகின்றனர்.]*

கமலா: ராஜி, நாங்கள் வருகிறோம். தசரா அன்று சங்கத்து நாடகத்துக்கு வரவும். எங்கள் அண்ணா ஸ்பெஷலா உனக்கு டிக்கட் கொடுத்திருக்கிறான்.

ராஜி: எனக்கு இந்தக் கூத்தெல்லாம் வேண்டாம்.

ராம் (திடீரென்று எதிர்ப்பட்டு): அடேயப்பா, ராதே! உனக்குக் கோபம் ஆகாதடி!

ராஜி: ஏனண்ணா, இத்தனை நேரம் இந்த அறையிலா இருந்தாய்? என்ன செய்தாய்?

ராம்: கொலு நாடகம் பார்த்துக் கொண்டிருந்தேன்.



### காட்சி – 3

*[ராஜியின் வீடு. டாக்ஸியில் கமலா வந்து இறங்குகிறாள்.]*

கமலா: போகலாமா?

ராஜி: நான் ஒரு கொலு நிகழ்ச்சிக்கும் வரவில்லை.

கமலா: ஹரே ராம்! இந்தப் பெண் என்ன இப்படிக் கண் கலங்கி...

ராம்: என்னைக் கூப்பிட்டீர்களா?

கமலா: உங்களையா?

ராம்: இல்லை 'ராம்' என்றீர்களே. அடியேன் நாமதேயம் அது.

கமலா: ஓஹோ, நீங்கள்தான் ராம்ஜியா?

ராஜி: அது என்னடி, ஜே போடுகிறாய்? அவர்தான் எனது அண்ணு.

கமலா (பரத முத்திரையில் ஒரு கும்பிடு போட்டு): வணக்கம் சார். தயவுசெய்து தங்கள் தங்கையையும் அழைத்துக் கொண்டு எங்கள் சங்கத்துத் தசரா நிகழ்ச்சிக்குத் தாங்கள் அவசியம் வர வேண்டும்.

*[டாக்ஸி மூவரையும் அழைத்துக் கொண்டு புறப்படுகிறது.]*

**காட்சி — 4**

*[சங்க நாடகத் திரை சபையினர் எரிச்சலைப் பார்க்க சகிக்காது தன்னைச் சுருக்கிக் கொள்கிறது.]*

ராஜி: ஏண்டி, உங்கள் அத்தை மகள் ரத்தினமா நடிப்பது?

கமலா: ஆஹா கண்டாய் ரத்தினத்தை! அத்தை மகள் திறமை எப்படி? சொத்தை யில்லாத இயற்கை நடிப்பு அல்லவா?

ராஜி: போதுமே, வெட்கமில்லே. இப்படியா பெண் பிள்ளை கதாநாயகனைத்தொட்டு நடிப்பாள்?

கமலா: தொட்டு விடத் தொட்டு விடத் தொடருமல்லவா? இல்லா விட்டால் நாயகி பாவம் எவ்வாறு நாடகத்தில் உண்டாகும்?

ராஜி: நாசமாய்ப் போன பாவம்! எனக்கு வருகிறது கோபம். இவளையா உங்கள் அண்ணு......

*[துக்கம் நெஞ்சை அடைக்கிறது.]*

ராம்: ராஜி, இந்தா நாடக மலர் பாரு. நாடகக் கதைச் சுருக்கம், நடிகர் ஜாபிதா எல்லாம்....

ராஜி: எனக்கு மலரும் வேண்டாம்; அரும்பும் வேண்டாம்.

ராம்: இதோ பார்த்தாயா? இந்தப் பெண் வேடம் பூண்டிருப்பவர் பெயர், புகைப்படம்....

ராஜி (திகைத்து): யாரு, ஸ்ரீமான் பாலுவா?.... அப்படியானால் கமலா.... அத்தை மகள் ரத்தினம்....

கமலா: சாட்சாத் எங்கள் அண்ணு!

ராஜி: எனக்குப் புலப்படவில்லையே!

கமலா: ஆமாண்டி, காதலுக்குக் கண் இல்லை என்று சும்மாவா சொன்னார்கள்?

ராஜி: அப்படியானால் அன்றைக்குக் கொலுவுக்கு வந்ததும் உங்கள் அண்ணுதானே?

கமலா: எல்லாம் வேஷ மயம் ஜகத். வேடப் பொருத்தம் சரி பார்க்க ஒத்திகை. தவிர நீ வேறு, உங்கள் வீட்டுக்குப் புடவை கட்டிக் கொண்டு வந்தால்தான் வரலாம் என்றாயாமே!

ராஜி: அண்ணு, நான்தான் ஏமாந்தேன் என்றாலும் உனக்குக் கூடவா அடையாளம் தெரியவில்லை.

ராம்: நான் அவளையா பார்த்துக்கொண்டு இருந்தேன். (அவனது கண்கள் கமலாவை நோக்க, அவளது இமைகள் தாழ்கின்றன.)

*[நாடகம் முடிந்ததும் அரிதாரம் கலைத்தும் கலையாத கவலை முகத்துடன் பாலு வருகிறான்.]*

கமலா: அண்ணு, உன் நடிப்பிலே ராஜி மெய்ம்மறந்து போய் விட்டாள்.

பாலு: ஆனால் 'கைப் பையை' மறந்து வைத்து விட்டு வரவில்லையே!

ராம்: அப்போ நாடகம் முடிந்த கையுடன் முகூர்த்தத்துக்கு நான் பார்த்து விடலாமா?

ராஜி: யாருடைய திருமணம் அண்ணு? உன்னுடையதா?

பாலு: ஆஹா, ஏ ஒன் வசனம்!

ராம்: இல்லை ராஜி! உனக்குத்தான்; உனக்கும் பாலுவுக்கும்.

பாலு: ஆஹா! இது அதைவிடப் பிரமாதமான வசனம்.

ராஜி: சரியாய்ப் போச்சு. ஏதோ நன்றாக நடிக்கிறீர்களே என்று சிநேகமாகப் பழக ஆரம்பித்தால் ஏதேதோ பிளான் போடறேளே, அதெல்லாம் ஒன்றும் நடக்காது மிஸ்டர். உங்களை நான் கொஞ்சமும் காதலிக்கவில்லை, புரிந்து கொள்ளுங்கள்!

பாலு: ஐயகோ! நாடகத்தை டிராஜடியா முடிச்சுட்டியே! (சாய்கிறான்)

*[எல்லோரும் சிரிக்கிறார்கள்.]*

# படித்துப் பாருங்கள்

## அடிமையின் தியாகம்

இந்திய நாட்டோடு தொடர்புடைய மொகலாய மன்னர்களின் வரலாறும், ஆட்சியும் தாஜ்மகல், குதுப்மினர் போன்ற பல சின்னங்களிலும், சில சரித்திரப் புத்தகங்களின் ஏடுகளிலும் மட்டுமே அடங்கிப் போய் விடவில்லை.

அந்த வரலாறுகளையும் அவற்றோடு இணைந்தவர்களையும் பின்னணியாகக்கொண்டு பல எழுத்தாளர்கள் அற்புதமான சிறுகதைகளையும், கம்பீரமான சரித்திர நாவல்களையும் படைத்திருக்கிறார்கள். எதிர்காலத்தில் இன்னும் பலர் படைக்கப் போகிறார்கள். இந்த வகையில் தமிழில் 'கௌசிகன்' எழுதிய சிறுகதைகள் 'அடிமையின் தியாகம்' என்ற பெயருடன் புத்தகமாகத் தொகுக்கப்பட்டு வெளிவந்திருக்கின்றன. பூவும் — மணமும் போல் சரித்திரக் கதைகளில் வரலாறும் கதையும் உருவமும் உணர்வுமாக ஒருங்கு இணைந்து விளங்க வேண்டும். பூ உருவம். மணம் உணர்வு. வரலாறு மணக்க வேண்டும். அதே நிலையில் கதையாகவும் மலர்ந்து உருப்பெற்று விளங்க வேண்டும். இந்தச் சிறுகதைத் தொகுதியில் வரலாறு மணக்கிறது. கதைகளும் பூரணமாக உருப் பெற்று மலர்ந்திருக்கின்றன. மொகலாயர் காலத்து வரலாற்று வழியிலே, நூதனமும் நுணுக்கமும், பிணக்கும், பெருமையும், காதலும், கபடமும், தியாகமும், இருட்டும் கலந்த பல சுவையான நிகழ்ச்சிகளை மணி மணியான சிறுகதைகளாக ஆக்கி அளித்திருக்கிறார் கௌசிகன்.

மனித வாழ்க்கையில் காதல், தியாகம், பொறுமை, வீரம், விவேகம் என்பது போல் காலத்தை வென்று நிற்கிற நித்தியமான உணர்ச்சிகள் பல என்றும் சாசுவதமாக இருக்கின்றன. ஒரு நல்ல கதாசிரியனுக்கு இந்த உணர்ச்சிகள்தாம் பெரிய மூலதனமாகிப் பயன்பட முடியும். ஆக்ராவின் சாதாரணக் குடிமக்களில் ஒருவனாகிய அரீப், மாமன்னன் ஷாஜஹானின் மகள் ஜஹானாரா பேகத்தைக் காதலிக்கிறான். காதலின் தீப் புண்கள் குணமாகத் தன் இரத்தத்தினாலேயே களிம்பு செய்யும் தியாக தீரனாக அவனை இந்தத் தொகுதியின் முதல் தரமான முதல் கதையில் நாம் சந்திக்கிறோம்.

சீக்கிய குல குருவான தேக் பகதூரை அவுரங்கசீப் கொலை செய்து கோட்டை வாசலில் தொங்க விட்டு விடுகிறான். அந்தக் குல குருவின் உடலை அங்கிருந்து மீட்டுச் செல்வதற்காகத் தன்னைப் பிரதி உடலாகத் தொங்க விடுவதற்குப் பணி கொடுக்கும் கிழவனின் தியாகத்தையும், கல்தான் தானிஷா—தன்னுடைய சேனாபதி ரஸாக்கைக் குற்றமற்றவர் என்று உணருகிற வரை சந்தேகமும் சூழ்ச்சியும், அவர் கண்களை மறைப்பதையும் சுவையான கதைகளாக இத்தொகுதியில் காண்கிறோம்.

மற்றும் ரூபமதியினது மாங்கல்யத்தின் பவித்திரத் தன்மையை மங்கலமான கதையாக்கிச் சித்திரிக்கும் 'மாங்கல்யம்' கதையும், தன் காதலனைக் கொன்றதற்குப் பழிக்குப் பழி வாங்கி விட்டு முடிவில் தானும் இறக்கும் வீராங்கனை குல்ருக்கையும், ஷாஜஹான்,—மும்தாஜ் — இவர்களுடைய காதலைத் தவிர தாஜ்மஹாலோடு சிற்பி உஸ்தாத் — அவன் மனைவி நஸீம் — இருவரின் காதலும் வேறு இணைந்திருக்கும் உருக்கமானதோர் இரகசியத்தையும், தன் மகள் ஜபுன்னிஸாவின் காதலன் சாவதைக் கண்டு களிக்கும் அவுரங்கசீப்பின் கொடூரத்தையும், தனக்கும், தாய்க்கும் சிறிது நன்மையும் செய்யாத தன் தந்தை சிறைப்பட்டபோது அவரையும் கூடக் காப்பாற்றிய சிவாஜியின் கடமை வீரத்தையும் நடை நயமும், வரலாற்று வனப்பும் மிக்க இக்கதைத் தொகுதியில் படித்து மகிழலாம். ஆயிரம் இரவு ராஜா, நிமித்திகன் சாபம், பரிசு, சாதனை, நாடோடியின் காதல் ஆகிய மற்றக் கதைகளும் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. இத்தொகுதியிலுள்ள பதின்மூன்று கதைகளையும் படிக்கும் போது மொகலாயர் கால வரலாற்றிலேயே நாமும் ஒருவராகி நிகழ்ச்சிகளையும் கதையையும் நேரிலேயே இருந்து கண்டு கொள்வது போல உணர்கிறோம். புத்தகத்தைக் கீழே வைத்ததும் ஒரு மிக நல்ல சரித்திரச் சிறுகதைத் தொகுதியைப் படித்து முடித்திருக்கிறோம் என்ற திருப்தியை முழுமையாகத் தருகிறது இந்தப் புத்தகம். புத்தகத்தின் தகுதிக்கு வேறென்ன சான்று வேண்டும்?

*ஆசிரியர்:* **கௌசிகன்;** *வெளியீடு:* **வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை — 17; விலை: ரூ. 3 — 50.**

## குட்டிக் கதை

"உன்னுடைய வாழ்வு முடிந்துவிட்டது: புறப்படு!" என்று அவசரப்படுத்திக் கொண்டு காலதேவன் என் முன் வந்து நின்றான்.

"என்னிடத்தில் நிறைய அன்பு இருக்கிறது!" என்று சொன்னேன். "அப்படியானால் பிறகு வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டு போய் விட்டான்.

சில நாட்கள் கழித்து, மீண்டும் வரும்படி அழைத்தான். "என்னிடத்தில் இப்பொழுது நம்பிக்கை இருக்கிறது!" என்றேன். "சரி; பிறிதொரு சமயம் வருகிறேன்!" என்று சொல்லிக் கொண்டு பேசாமல் போய் விட்டான்.

பின்னும் சில நாட்கள் கழிந்து வந்தான். "இப்பொழுது என்னிடத்தில் கவிதை இருக்கிறது!" என்றேன். "சரி; இனி நான் உன்னிடம் வரப் போவதே இல்லை!" என்று கூறிக் கொண்டு, அங்கிருந்து மெல்ல நழுவி விட்டான்!

— **தமிழழகன்**

# குண்



''உமா! நம் பிச்சுமணியோ தன் தாத்தாவின் கழுத்தைக் கட்டிக்கொண்டு பைத்தியக்காரனைப் போல உன்னைப் பற்றியே அதிகமாகப் பேசி புலம்பியிருக்கிருன். இரவு பகலாக அவனுக்குத் தூக்கமும் இல்லை. அதனல் அவனுடைய காப்பியில் தந்திரமாகத் தூக்க மாத்திரைகளை நான் கலந்து கொடுத்தேன். ஆனலும் உன் நினைவை அமுக்க அந்தத் தூக்க மாத்திரைகளால் முடியுமா என்பது எனக்குச் சந்தேகமாகவே இருந்தது. ஆனலும் ஆண்டவன் புண்ணியத்தால் அவன் எப்படியோ சிறிது கண்ணயர்ந்தான். கிழவர் மிகவும் மனம் உருகி விட்டார். உன்னைப் பற்றி என்னிடம் நிறைய விசாரித்தார். கடைசியில் அவர் ஒரு முடிவு செய்துகொண்டு தான் நேற்றிரவு யாருக்கும் தெரியாமல் ரகசியமாக உன் வீட்டுக்குப் புறப்பட்டு வந்திருக்கிருர். படுக்கையை விட்டு அவர் எழுந்து நடமாடவே கூடாது என்ற என் எச்சரிக்கைகளையும் அவர் பொருட்படுத்தவில்லை. தம் காலம் முடிவதற்குள் தம் பேரனை ஒரு நல்ல பெண்ணின் கையில் ஒப்படைத்து விட வேண்டும் என்ற தவிப்பே அவருக்குப் பெரிதாக இருந்திருக்கிறது. அதனுல் அவர் தம் கடைசிக் கடமையை நிறைவேற்றி விட்டதாக நம்பிக்கையோடும் மன நிறைவோடுந்தான் உன் வீட்டில் மூர்ச்சித்து விட்டார்!'' என்று கூறி முடித்த டாக்டர் ஜகந்நாதன், ''நீ இப்போது என்ன யோசிக்கிறுய் என்பது எனக்குப் புரிகிறது, உமா! அவர் விரும்பிய வாக்குறுதியை நீ நிறைவேற்றப் போகிருயா இல்லையா? என்பது அவர் செத்த பிறகு அவருக்குத் தெரியப் போவதில்லை!'' என்ருர். அந்தக் கடைசி வாக்கியம் உமாவின் கன்னத்தில் 'பளார்' என்று அறைவது போல் இருந்தது.

தாத்தாவையும் பறிகொடுக்கப்போகும் பிச்சுமணியைப் பற்றி நினைத்ததும் உமாவுக்கு அவனைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்று உதடுகள் துடித்தன. அதற்குள் ஜகந்நாதனே அதைப் புரிந்துகொண்டு, ஒரு புன்முறுவலுடன் கூறலானுர்.

''உமா! கிழவரின் உடலை நேற்றிரவு உன் வீட்டிலிருந்து தூக்கி வந்து அவருடைய பங்களாவில் போட்டதிலிருந்து இன்று காலை வரை பிச்சுமணி தன் தாத்தாவின் அருகிலேயே 'தாத்தா, தாத்தா' என்று கூப்பிட்டுக் கதறி அழுதுகொண்டிருந்தான். ஆனல் தாத்தா கண் திறந்து கூடப் பார்க்கவில்லை. அப்படியே அவருடைய காலம் எந்த நிமிஷமும் முடிந்து விடும் என்பது அவனுக்குப் புரிந்து விட்டது. உடனே அவன் விருட்டென்று எழுந்து சென்றுன்!'' என்று கூறி நிறுத்திய ஜகந்நாதன் ஒரு கணம் உமாவின் முகத்தில் ஏற்பட்ட பரபரப்பை உற்று நோக்கி விட்டு, ''உமா! இந்த உலகத்தில் பிச்சுமணிக்கு இருப்பதெல்லாம்

# ல்லிகை

அரு. ராமநாதன்

இரண்டே கண்கள்தான்! ஒன்று நீ. இன்னொன்று அவனுடைய தாத்தா. நீ கிடைக்க மாட்டாய் என்ற விரக்தியோடு தாத்தாவையும் இழந்து விடும் துக்கமும் சேர்ந்து கொண்டால் அவனுடைய வாழ்க்கையே இருளடைந்து விடும். அது அவனுக்குத் தெரியும். அதற்கு முன்னதாக அவன் தன் உயிரையே அணைத்துவிடத் தீர்மானித்து விட்டான். அவன் தன் தனியறைக்குச் சென்று உட்புறம் கதவைத் தாளிட்டுக் கொண்டு, இப்போது ஒரு கைத் துப்பாக்கியுடன் தனியாக உட்கார்ந்து கொண்டிருக்கிறான். தாத்தாவின் மரணச் செய்தியைப் பற்றிய ஓலம் கிளம்பிய உடனேயே அவனுடைய கைத் துப்பாக்கியிலுள்ள குண்டும் வெடித்து அவனுடைய உயிரைக் குடித்து விடும். தாத்தாவும் பேரனும் ஒன்றாகவே இந்த உலகத்தை விட்டுப் போய் விடுவார்கள்!'' என்றார்.

''பிச்சுமணியை நீங்கள் எப்படியாவது காப்பாற்ற வேண்டும், டாக்டர்!'' என்று பதறிய உமாவுக்கு உடம்பெல்லாம் ஒரு நடுக்கம் மூண்டுவிட்டது.

''நானும் பட்லர் இருதயசாமியும் போய் அவனுடைய அறை ஜன்னல் பக்கம் நின்று கொண்டு அவனுக்கு நயமாகவும் பயமாகவும் எவ்வளவோ சமாதானங்கள் சொல்லிப் பார்த்தோம். ஆனால் அவன் தன் காதில் வாங்கிக் கொள்ளாமல் தன் அறை ஜன்னலைக் கூட மூடிக் கொண்டு விட்டான். இதற்கு மேல் நான் என்ன செய்ய முடியும்? போலீஸாரைக் கூப்பிட்டு அவன் தற்கொலை செய்து கொள்ள முயல்கிறான் என்று புகார் கொடுக்கலாம். ஆனால் அதனாலும் இப்போது ஒரு பிரயோசனமும் இல்லை. இப்போது அவனுடைய அறைக் கதவை உடைத்தாலும், அல்லது யாராவது போய் இலேசாக அந்தக் கதவைத் தட்டினாலும் தன் தாத்தாவைப் பற்றிய மரணச் செய்திதான் வந்திருக்கிறது என்று அவன் நினைத்துக் கொண்டு உடனே திடீரென்று தன்னைச் சுட்டுக் கொண்டு விடுவான்.''

''இனி என்ன செய்வது டாக்டர்? என்ன செய்வது?'' என்று உமா துடிதுடித்தாள்.

''உமா! இனி பிச்சுமணியின் உயிரைக் காப்



பாற்றக் கூடிய சக்தி இந்த உலகத்தில் உன்னைத் தவிர வேறு எதற்கும் இல்லை! இதைப் பட்லர் இருதயசாமிதான் எனக்கு உணர்த்தி உடனே உன்னை அழைத்துக் கொண்டு வரும்படி என்னை அங்கிருந்து விரட்டினான். இப்போது உன்னை நான் அங்கு அழைத்துக் கொண்டு போகா விட்டால் அவன் என்னைக் கொலை செய்து விடுவான். பிச்சுமணியின் உயிரை நீ காப்பாற்றிவிட்டாலோ உன்னையும் கொலை செய்துவிடுவான். பிறகு பிச்சுமணியின் உடலையும் உன்னுடைய உடலையும் ஒன்றாக ஒரே சமாதியில் வைத்துத் தன் கண் குளிரப் பார்த்து விட்டுத் தானும் தற்கொலை செய்து கொள்வான். அவ்வளவு தூரம் அவனுக்குப் பிச்சுமணியின் மீது அளவிலாத அன்பு உண்டு! அன்பு அளவு மீறி விட்டால் அது அதிபயங்கரத்தில் தான் போய் முடியும்!''

உமா தலை குனிந்தாள். பிறகு அவள் ''எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை டாக்டர்'' என்றாள் மெல்ல.

''உனக்கும் பிச்சுமணிக்குமிடையே பரஸ்பரம் ஆழ்ந்த அன்பு உண்டு என்பது உனக்குப் புரிந்திருக்கிறது! ஆனால் அந்த அன்பு ஒரு வாலிபனிடம் எத்தகைய ஆவல்களை உண்டாக்கும், எந்த நிறைவை நாடும் என்பது மட்டும் உனக்குப் புரிய வில்லையா, உமா?'' என்று ஏளனமாகக் கேட்ட ஜகந்நாதன் ஒரு புன்முறுவலுடன், ''உமா! பிச்சுமணியிடம் அத்தகைய அன்பை வளர்த்தவள் நீ! அந்த அன்பு அவனிடம் காதலாக முற்றியதற்குக் காரணம் உன்னுடைய பெண்மை!'' என்றார் அழுத்தம் திருத்தமாக.

உமா மௌனம் சாதித்தாள்.

ஜகந்நாதன் தம்முடைய கூர்மையான விழிகளால் உமாவை உற்றுப் பார்த்துக் கொண்டே, ''உமா! உன் மீது பிச்சுமணி அளவிலாத காதல் கொண்டிருக்கிறான்! அவனுடைய முதற் காதலும் இறுதிக்காதலும் இது ஒன்றுதான்! இத்தகைய காதல் வாழ்க்கையில் ஒரே ஒரு தடவை தான் வரும்!'' என்றார்.

அவருடைய அந்தக் கடைசி வாக்கியம் உமாவின் நெஞ்சையெல்லாம் ஊடுருவி அவளுடைய இருதயத்தின் அடித்தளம் வரை பாய்ந்து எழும்பி அவளுடைய உடம்பெங்கும் சிலிர்த்து நின்றது.

கடைசியில் அவள் தழதழக்கும் குரலில், ''என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள் டாக்டர்?'' என்றாள் நிர்க்கதியான நிலையில் பரிதாபமாக.

''என் மீது உனக்குப் பரிபூரண நம்பிக்கை யிருந்தால் இனி மேல் நான் சொல்லுகிறபடி யெல்லாந்தான் நீ நடக்க வேண்டும்!''

''சொல்லுங்கள் டாக்டர்!''

''நீ பிச்சுமணியின் அறைக்குள் எப்படியாவது தந்திரமாக நுழைய வேண்டும். அவன் கையில் உள்ள துப்பாக்கியை உன் கையில் வாங்கிக் கொள்ள வேண்டும்.''

''டாக்டர்....''

''ஆமாம், உமா! அப்படித்தான் நீ செய்ய வேண்டும்! அதோடு இன்னொரு விஷயம்.... உன்னுடைய வீட்டு விலாசத்தை அவனுடைய தாத்தா என்னிடம் கேட்ட போது பிச்சுமணியின் கைப் படவே உன் விலாசத்தை எழுதி வாங்கிக் கொடுத்தேன். உன்னைத் தாத்தா இங்கு வரவழைத்துப் பேசுவார் என்று பிச்சுமணி நினைத்தானே தவிர, அவரே படுக்கையை விட்டு எழுந்து ரகசியமாக உன் வீட்டுக்குப் போவார் என்று அவன் சிறிதும் எதிர்பார்க்க வில்லை. ஆனால் கிழவரே அப்படி உன்னைத் தேடிக் கொண்டு வந்தால்தான் உன் மனம் இளகும்என்று நினைத்திருப்பார். அதனால்தான் மரணாபாயத்திற்கும் துணிந்து உன் வீட்டுக்குக் கிழவர் வந்தார். அதன் விளைவாக நீ தான் சிறிதும் ஈவிரக்கமில்லாமல் தன் தாத்தாவின் மனத்தையும் உடைத்துத் தள்ளி அவரை மரணப் படுக்கைக்கு அனுப்பி யிருக்கிறாய் என்று பிச்சுமணி நினைத்துக் கொண்டிருக்கிறான். அதனால் அவன் மிகவும் ஆத்திரமும் படுவான்...''

''டாக்டர்..'' என்ற உமாவுக்கு உடம்பெல்லாம் வெட வெட வென ஆடியது.

ஜகந்நாதனே புன்முறுவலுடன், ''உமா! இன்னும் ஒரு விஷயம். உன்னைப் பார்த்ததும்



'' ஏம்ப்பா! அரிசி பழசா; புதுசா?''
'' என்ன அப்படிக்கேட்கிறீங்க? ஆறு மாசமாகப் பதுக்கின அரிசி சார்!''

நீண்ட கால அனுபவத்தினால்
தயாரிக்கப்பட்டது...

TRAYONS

# ட்ரேயான்ஸ் ரேயான் நூல்கள்

இந்தியாவில் முதல் முதலாக சிறந்த ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட உன்னத நூல் "ட்ரேயான்ஸ்" ரேயான் நூல்கள் விலை மலிவு, நீண்ட கால உழைப்பு, பகட்டான உடைகளுக்கு ஏற்றது.

"ட்ரேயான்ஸ்" ரேயான் நூல்கள்
100, 120, 150, 300 டினையர்களில்
தயாரிக்கப்படுகின்றன.

ஸ்டாக்கிஸ்டுகள்

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

61 செம்புதாஸ் தெரு சென்னை 1
போன் 21641 தந்தி CELYARN

கிளைகள்

68/416 மெயின் ரோடு செவ்வாய்ப்பேட்டை சேலம்
போன் 3253 தந்தி CELYARN

114/A தெற்கு மாசி வீதி மதுரை
போன் 2598 தந்தி CELYARN

இந்தியா லைப் பில்டிங் திருச்சிரோடு கோயமுத்தூர்
போன் 4425 தந்தி RAYONS

பிச்சுமணி கத்துவான். உனக்கு மரியாதை கொடுக்காமலும் பேசுவான். மேலும் அவன் உன்னை நீங்கள்என்று கூப்பிட மாட்டான். நீ என்றுதான் கூப்பிடுதான். அப்படிக் கூப்பிட்டால் தான் உங்கள் இருவருக்கிடையேயுள்ள வயது வித்தியாசங்களும் தூரமும் குறைந்து காதலின் நெருக்கம் ஏற்படுவதற்குரிய சம நிலை சித்திக்குமென்று அவனுக்கு நான் இதோபதேசம் செய்திருக்கிறேன். அது அவனுடைய மனத்தில் ஆழமாகப் பதிந்திருக்கிறது!'' என்றார் ஜகந்நாதன்.

அவரை வியப்புடன் ஏறிட்டு நோக்கிய உமா அடுத்த கணம் ஏதோ ஒரு யோசனையில் ஆழ்ந்தாள். ''உமா! இதற்கு மேல் எதுவும் என்னால் இப்போது சொல்ல முடியாது! பிச்சுமணி விரக்தியின் உச்சஸ்தாயியில் தன்னையே கொன்றொழித்துக் கொள்ளும் வெறியில் இருக்கிறான். இந்த நிலையில் அவன் உன்னிடம் எப்படியெல்லாம் நடந்து கொள்வான் என்பதும் தெரியாது. ஆனால் அவனுடைய உயிரும் கிழவரின் ஆத்ம சாந்தியும் உன் கையில்தான் இருக்கிறது என்பதை ஒவ்வொரு நிமிஷமும் உன் மனத்தில் ஞாபகப்படுத்திக் கொண்டேயிரு!'' என்றார் ஜகந்நாதன்.

உமா பதில் எதுவும் சொல்ல வில்லை.

### அத்தியாயம் அறுபத்துமூன்று

## காதல் வெள்ளம்

மேஜர் ராமதுரையின் பங்களாவுக்குள் உமாவும் டாக்டர் ஜகந்நாதனும் நுழைந்த போது அங்கு பயங்கரமான நிசப்தம் உறைந்திருந்தது. முன்கூடத்தில் ஒரு மூலையில் பட்லர் இருதயசாமி பிரும்மஹத்தி பிடித்தவன் போல் உட்கார்ந்திருந்தான்.

உமாவைக் கண்டதும் அவன் புத்துயிர் பெற்றவன் போல் எழுந்து ஓடி வந்து, ''வாங்கம்மா! வாங்கம்மா! தம்பியின் உயிரைக் காப்பாற்றுங்கம்மா!'' என்று கையெடுத்துக் கும்பிட்டுக் கண்ணீர் வடியக் கெஞ்சினான்.

உமாவின் கண்களில் நீர் துளித்துக் குரல் அடைத்தது.

''பெரியவர் எப்படி யிருக்கிறார்?'' என்று கேட்டார் டாக்டர் ஜகந்நாதன்.

''உங்களுக்குத் தெரியாததா டாக்டரய்யா? அவர் படுக்கையில்தான் அப்படியே கிடக்கிறார். இன்னும் சுய நினைவு திரும்பி வரவில்லை. அவர் எப்படியாவது கண் திறந்து நம் தம்பியையும் இங்கு அம்மாவையும் ஒன்றாகப் பார்த்து விட்டால் போதும்; அதுக்கு நீங்கள் ஏற்பாடு செய்யுங்கள் டாக்டரையா!'' என்று பட்லர் இருதயசாமி நெஞ்சு விம்ம விண்ணப்பித்துக் கொண்டான்.

''நம் பிச்சுமணி இன்னும் அவனுடைய அறைக்குள்தான் கைத் துப்பாக்கியுடன் உட்கார்ந்திருக்கிறானா?''

''ஆமாங்கய்யா! அந்த அறைக் கதவு ஜன்னல் கதவுகளெல்லாம் மூடியிருப்பதால் உள்ளே தம்பி என்ன செய்யுது என்று தெரியவில்லை. ஆனால் உள்ளேயிருந்து ஒரு சப்தமும் இதுவரை அரவுமில்லை!'' என்ற பட்லர் இருதயசாமி என்ன நினைத்துக் கொண்டானோ பச்சைக் குழந்தை போல் விம்மி விம்மி அழுதான்.

டாக்டர் ஜகந்நாதன் அமைதியாக உமாவை நோக்கி, ''நீ இப்போது பிச்சுமணியின் அறைக் கதவை தட்டினாலும் குரல் கொடுத்தாலும் தன் தாத்தாவைப் பற்றிய மரணச் செய்திதான் வந்திருக்கிறதென்று அவன் நினைத்துக் கொண்டு சட்டென்று தன்னைத் தன் கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொண்டு விடுவான். அதனால் ஏதாவது குறுக்கு வழியில்தான் தந்திரமாக அவனுடைய அறைக்குள் நீ நுழைய வேண்டும்!'' என்றார்.

பட்லர் இருதயசாமி தன் அழுகையையும் விம்மலையும் அடக்கிக்கொண்டு கண்களில் ஒரு புதிய ஒளியுடன், ''அம்மா! எங்கள் தம்பியின் அறைக்குப் பின்னால் ஒரு சின்னப் பால்கனி இருக்கிறது. அதன் வழியாகவும் தம்பியின் அறைக்குள் நுழைந்து விடலாம். ஆனால் அந்த பால்கனிக்கு எப்படிப் போவது?'' என்று குழம்பினான்.

ஜகந்நாதன் சட்டென்று உமாவின் முகத்தைக் கூர்ந்து பார்த்துக்கொண்டே ''ஓ! எனக்கு ஒரு ஐடியா தோன்றுகிறது. மாடிப் பக்கமுள்ள பம்புக் குழாய் வழியாகத் தொற்றி ஏறி அந்தப் பால்கனிக்குள் குதித்து விடலாம். பிறகு ஓசைப்படாமல் பிச்சுமணியின் அறைக்குள் புகுந்து அவனிடமுள்ள கைத் துப்பாக்கியையும் லபக்கென்று பறித்துக் கொண்டு விடலாம்!'' என்று யோசனை வழங்கியவர், ''நான் போய்ப் பெரியவரைப் பார்க்

கிறேன்! நீ போய் பிச்சுமணியைப் பார், உமா!'' என்று உத்தரவிட்டார்.

அதன் பிறகு உமா தான் ஒரு பெண் என்பதையும் மறந்து, தன்னையும் மீறிய ஓர் அதீத சக்தியால் உந்தித் தள்ளப்பட்டு, பம்புக் குழாயில்—தொற்றி ஏறி பால்கனிக்குள் மெல்ல இறங்கினாள். பிறகு ஓசைப்படாமல் பிச்சுமணியின் அறைக்குள் நுழைந்துஅவனுடைய முதுகுப்புறம் வந்து நின்றாள்.

பிச்சுமணி ஒரு நாற்காலியில் சிலை போல் ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்தான். தன்னுடைய கையில் உள்ள சிறு கைத் துப்பாக்கியின் கடு முனையைத் தன் கன்னப் பொட்டில் குறியாகப் பதிய வைத்துக் கொண்டு எந்த நிமிஷமும் தன்னைச் சுட்டுக் கொள்ளத் தயாராகவே அப்படி உட்கார்ந்திருந்தான்!

உமா சட்டென்று அவனுடைய அந்தக் கையைத் துப்பாக்கியோடு சேர்த்துப் பிடித்துத் தன் பக்கம் திருப்பிக் கொண்டாள்.

பிச்சுமணி திடுக்கிட்டு உமாவைத் திரும்பிப் பார்த்ததும் அதிசயப்புடன், ''உமா! உமா!'' என்று கூவினான் என்றாலும் அடுத்தகணமே அளவு கடந்த ஆத்திரத்துடன், ''நீயேன் இங்கே வந்தாய்?'' என்று கத்தினான்.

''முதலில் கைத் துப்பாக்கியை என்னிடம் கொடுக்க வேண்டும்!''

''அதைக் கேட்பதற்கு நீயார்?''

''துப்பாக்கியைக் கொடுக்கா விட்டால்.....''

''நீ என்ன செய்வாய்? உன்னிடம் டியூஷன் படிக்கும் சின்னப் பையன் என்று என்னையும் நினைத்து இன்னுமா அதிகாரம் பண்ணுகிறாய்? நான் ஆண்பிள்ளை! அதை நீ முதலில் புரிந்து கொள்!''

''எல்லாவற்றையும் நான் புரிந்து கொண்டுதான் வந்திருக்கிறேன்!'' என்று தழு தழுக்கும் குரலில் கூறிய உமா தன் கண்களில் நீர் பொங்க, ''உங்கள் கையில் உள்ள துப்பாக்கியை தயவுசெய்து என்னிடம் கொடுங்கள். இல்லா விட்டால் அந்தத் துப்பாக்கியால் என்னையே முதலில் சுட்டுக்



''காற்று பலமாக வீசுகிறதே. புடவைத் தலைப்பைக் கொஞ்சம் இழுத்துச் செருகிக் கொள்ளக் கூடாதா?''

கொன்று விடுங்கள்!'' என்று கை எடுத்துக் கும்பிட்டான்.

அவனுடைய அந்தப் புதிய போக்கும் தன்னைமரியாதையாக அழைக்கும் மாறுதலும் பிச்சுமணிக்குப் புதுமையாகத் தோன்றின என்றாலும், தன் தாத்தாவின் இறுதி மூச்சைப் பற்றிய எண்ணமே மேலோங்கி நின்று அவனுக்கு அளவிலாத ஆத்திரத்தைக் கிளப்பியது.

''அங்கே என் தாத்தா சாகக் கிடக்கிறார். அது உன்னால் தான்! உன்னால்தான்! என்மனத்தை உடைத்தது போல் அவர் மனத்தையும் உடைத்துத் தள்ளியிருக்கிறாய்! ராட்சஸி! ஈவு, இரக்கம், இருதயம் என்பதே இல்லாத ராட்சஸி!''

உமா தன் காதுகளைப் பொத்திக் கொள்ள வில்லை. தன்னைத் திட்டித் தீர்க்க வேண்டும் என்றே விரும்பினாள்.

''என் தாத்தாவும் நானும் செத்துப் போனால் அந்தப் பழி உன் மீது விழுந்து விடுமே என்று பயந்துதான் இப்போது நீ வந்திருக்கிறாய்! அதுவும் நீயாக வரவில்லை. டாக்டர் ஜகந்நாதன் சொல்லித்தான் வந்திருக்கிறாய்! இப்போதும் நீ என்னிடம் ஏதோநாடக மாடி என்னை ஏமாற்றவே வந்திருக்கிறாய், நயவஞ்சகி!''

உமா தன் கண்களில் நீர் பொங்கப் பரிதாபமாகப் பிச்சுமணியின் முகத்தை ஏறிட்டுப் பார்த்து, ''உங்களுக்காகவே இப்போது வந்திருக்கிறேன்!'' என்று கூறி விட்டு இலேசாகப் புன்முறுவல் பூக்க முயன்றாள்.

''நீ இல்லாமல் நான் வாழ மாட்டேன் என்று நினைத்தாயா? அது உனக்குத் தெரியும்! அதைத் தெரிந்து வைத்துக் கொண்டே இத்தனை நாட்களாக என் இருதயத்தைச் சித்திரவதை செய்து வந்தாய். ஆரம்பத்தில் என்னிடம் நீ அன்பு காட்டினாய். அந்த அன்பு உன் டியூஷன் குழந்தைகளிடம் காட்டும் அன்பைப் போன்றது என்று தயவுசெய்து சொல்லாதே. அப்படிச் சொல்லி என்னையும் உன் மனசையும் இனி மேல் உன்னால் ஏமாற்ற முடியாது! நீ காட்டிய அன்பு என்னிடம்

பரிபூரணமான காதலாக வளர்ந்து வந்தது. அது உனக்கும் தெரியும்! அன்பு கனியும் உன் பார்வைகளாலும் பேச்சுக்களாலும் உணர்ச்சிகளாலும் என்னை முற்றிலும் உன் வசமாக்கிக் கொண்டாய். என் கனவுகளில்கூட நீயே வந்து என் காதலை ஊட்டி வளர்த்தாய். கடைசியில் அதெல்லாம் அர்த்தமற்றது என்று கூறி என்னை அழ வைத்து அனுப்பினாய். என்னை மனிதனென்று நினைத்தாயா அல்லது விளையாட்டுப் பொம்மையென்றோ உணர்ச்சியற்ற மரக்கட்டையென்றோ நினைத்தாயா? உன்னைப் பொறுத்தவரை என் இருதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு என்னை மறந்து விட முயன்றாய். ஆனால் என்னை நீ புறக்கணித்த பிறகும்கூட நான் உன்னை மறக்க முயலவில்லை. மறக்க முடியாது! அதைவிடச் சாவதே மேல் என்று நினைத்தேன். ஆனால் என் தாத்தாவுக்காக என் உடம்பில் என் உயிரைப் பிடித்து வைத்துக் கொண்டிருக்க வேண்டியிருந்தது. இந்த நிலையில் நான் பைத்தியம் பிடித்தவன் போலாகி விட்டேன்!'' என்று பிச்சுமணி மடை திறந்த வெள்ளம் போல் தன் உணர்ச்சிகளை வார்த்தைகளாக்கிக் குமுறிக் கொட்டினான் அவள் முன்னால்.

அந்த உணர்ச்சி வெள்ளத்தை எதிர்த்து நீந்தச் சக்தியற்றவளாக உமா தலை குனிந்தபடி நின்றாள்.

''இனி நான் என்ன செய்வதென்று கொந்தளித்தேன். உன்னை மறப்பதற்காக நான் குடிகாரனாக மாறலாம். ஆனால் அதன் மூலம் என்னையே நான் அழித்துக் கொண்டாலும், அந்தக் குடி போதையாலும் உன் நினைவை அமுக்கவோ என் மனத்திலிருந்து உன் உருவத்தை அகற்றவோ முடியாது. ஒரு வேளை அதன் மூலம் நான் வெறி பிடித்த மிருகமாக மாறி உன் வீட்டுக்கு ஓடோடி வந்து என் காதலையெல்லாம் உன்னிடம் பலவந்தமாகப் புகட்டி உன்னைப் பலாத்காரம் செய்து உன் மனத்தை இளக வைக்கலாம். ஆனால் உன்னைக் காதலித்த பிறகு அப்படிப்பட்ட மிருகமாக மாறவும் என்னால் முடியவே முடியாது!''

''நீங்கள் அப்படி மாறவே மாட்டீர்கள்!'' என்று உமா விம்மினாள்.

''அதுவும் உனக்குத் தெரியும்!'' என்று குமுறிய பிச்சுமணி, ''என் பணத்தைக் கொண்டு உன்னைப்போன்ற எத்தனையோ பெண்களையும் உன்னை விட அழகான பெண்களையும் கூட நான் விலைக்கு வாங்க முடியும். விதம் விதமான அந்தப் பெண்கள் ஒவ்வொருத்தியிடமும் உன்னுடைய ஒவ்வொரு அம்சத்தின் சிறிது பிரதிபலிப்பையாவது காண முடியும். ஆனால் உன்னைக் காதலித்த பிறகு அப்படிப்பட்ட மோகாந்தகாரனாகவும் மாற என்னால் முடியாது! உன்னையே நான் மணந்து கொள்ள வேண்டும் என்றுதான் உன் சின்னப் பிள்ளையாரிடம் முன்பொரு தடவை நான் ஒரு வரம் கேட்டேன். என் வாழ்க்கையிலேயே கேட்கக் கூடிய ஒரே வரம் அதுதான்! அது பலிக்காதென்று தெரிந்த பிறகு எனக்கு உலகத்தின் மீதே வெறுப்பும் ஏற்பட்டு விட்டது. இரவு பகலாக உன் நினைவால் எனக்குத் தூக்கமும் இல்லை! ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு வினாடியும் உன்னை நினைத்துக் கொண்டே அணு அணுவாகத் துடித்துக் கொண்டிருந்தேன். இதற்கெல்லாம் ஒரு முடிவில்லையா என்று பிராணவஸ்தையோடு முறையிட்டேன்.

''உன் பூஜை மாடத்திலுள்ள சின்னப் பிள்ளையாரை என் மனத்தில் வைத்துக் கொண்டே அவரிடம் முறையிட்டேன். கடைசியில் இதற்கெல்லாம் ஒரே ஒரு முடிவுதான் எனக்குத் தெரிந்தது. அது நான் சாவதுதான்! என்னையே சுட்டுக் கொண்டு தற்கொலை செய்து கொள்வதுதான்! இந்த உலகத்தை விட்டு நானும் என் தாத்தாவும் ஒன்றாகவே போய் விடலாம் என்று நினைத்திருந்தேன். அதற்கும் நீ தடையாக வந்து விட்டாய். என் தாத்தாவின் கதை இன்றே முடிந்து விடும். அதற்கு முன்னதாக இப்போதே என் கதையும் முடிந்து விடட்டும்!'' என்று குமுறிய பிச்சுமணி தன் கையில் உள்ள துப்பாக்கியை உமாவின் கைப் பிடியோடு சேர்த்திழுத்துத் தன் தலைக்குக் குறி பார்த்த வண்ணம் திரும்பினான்.

உமா பதறினாள். ''இல்லை! பொறுங்கள்! உங்களை இந்த நிலைக்கு ஆளாக்கிய என்னையே சுட்டுக் கொன்று விடுங்கள்! உங்கள் இருதயத்தைச் சித்திரவதை செய்த என் இருதயத்திலேயே உங்கள் கைத் துப்பாக்கியால் சுட்டுக் கொன்று விடுங்கள்!'' என்று துடித்தவள் விம்மினாள்.

பிச்சுமணி அளவுகடந்த ஆத்திரத்தில் சித்தவெறி கொண்டவன் போல் தன் கைத் துப்பாக்கியின் முனையை உமாவின் இருதயத்துக்கு நேராகத் திருப்பினான்.

உமா தன் நெஞ்சை நிமிர்த்திக் கண்களை மூடிக் கொண்டு அசைவற்று நின்றாள். **(தொடரும்)**



உங்கள் கூந்தலின் உண்மை
அழகை வெளிப்படுத்த
கால்கேட்
பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்
உபயோகியுங்கள்
COLGATE
HAIR OIL
கால்கேட்
பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்
இப்பொழுது
கால்கேட் பெர்பியூம்டு
கோகோனட் ஹேர் ஆயில்
உங்கள் கூந்தலுக்கு அழகும் நறுமணமும் சேர்க்க

அட்டைப்படக் கதை

# கனவோ அது?

ஸ்ரீ வேணுகோபாலன்



உண்மையில் இன்னும் இரவாகவில்லை. ஆனால் தெரு வரிசை ஓரங்களிலும் தொலைவில் தென்படும் சாலை மேட்டிலும் இருள் படியத் தொடங்கி விட்டது. வீடே பார்ப்பதற்குக் களை இழந்து கிடந்தது. மழை யடித்துப் போனதால் கட்டடம் பாசி பிடித்த காரைப் பூச்சுக்கள், அரித்துப் போன மர விட்டங்கள், சோர்வாய் விழுந்த கருப்பேறிய பக்கச் சுவர்!

மனத்துக்கே பிடிக்க மாட்டேன் என்கிறது. வீட்டைச் சுற்றி வரச் சகதி! 'சொத சொத' வென்று தண்ணீர் ஊறி மதமதக்கும் களிமண் பூமி! வடிகால் இல்லாமல் தேங்கி நிற்கும் காவித் தண்ணீர்! எல்லாமே ஏதோ துக்க நாள் போல் தோன்றுகிறது.

மணி ஐந்தரை. கதவு 'டபீ'லென்று விண்டு திறப்பது போல் சத்தம் கேட்டது. வீட்டுக்குள் கௌரி நுழைந்திருப்பாள்.

''அம்மா! அம்மா!'' கௌரி உள்ளே தட்டுக்கெட்டுப் போவதுபோல் நுழைந்தாள். ''எங்களுக்குக் கடைசி பீரியட் கிடையாது. ஒரே கும்மாளம் போட்டோம்.''

கௌரி காப்பி பருகி விட்டாள். பரந்திருந்த அவள் தலையைச் சீராக்கிவிட்டாயிற்று. யூனிபாரத்தை அவிழ்த்துவிட்டு வேறு கவுன் போட்டுக் கொண்டாள். பிறகு அடுத்த அறையுள் நுழைந்து ஸ்டூல் மேல் ஏறிச் சுவிட்சைப் போட்டுவிட்டுப் பாடப் புத்தகத்தை எடுத்துக் கொண்டுவிட்டாள்.

இன்னும் சிறிது நாழிகை. வெளியே இப்போது இன்னும் கறுத்து விட்டது. இருளுக்குள் கடைசியாக மூழ்கப் போகும் வீடுகள் தங்கள் கூரைகளை மாத்திரம் உருத் தெரியும்வண்ணம் வெளியே காட்டிக் கொண்டிருந்தன.

மீண்டும் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. சத்தந்தானா? அது சத்தமே இல்லை! சத்தம் கேட்பதைப் போல் பிரமை! ஆனால் கதவுகள் திறக்கப்பட்டது உண்மைதான்.. அவ்வளவு மெதுவாக அணு அணுவாகக் கதவை விலக்கித் திறந்தார்கள். ஆனால் அந்தத் திறப்பில் சத்தமே கேட்கா விட்டாலும் அவள் காதுகளுக்கு மாத்திரம் ஏதோ கேட்டு விட்டது. இது அவளுள் தோன்றும் ஓர் அதீத உணர்வின் சக்தி என்றுதான் சொல்ல வேண்டும்.

வந்தவன் பிட்டு! அவளுக்கு மாத்திரம் நன்கு தெரியும். இருந்த இடத்தில் இருந்து கொண்டே 'சின்னதுரை' — அவள் பிட்டுவுக்கு இட்டிருக்கும் பட்டப் பெயர் — என்ன செய்கிறான் என்பதைக் கணத்துக்குக் கணம் அவளால் உணரமுடியும். இப்போது அவன் அடுத்த அறையுள் இருப்பான். கௌரி படித்துக் கொண்டிருப்பதை முறைத்துப் பார்ப்பான். தன் பையைக் கீழே வைத்துவிட்டுப் பிறகு அடியோசைப் படாமல் சமையலறைப் பக்கம் மெத்து மெத்தென்று நடந்து செல்வான். பிளாஸ்கில் இருக்கும் காப்பியைச் சப்புக் கொட்டிக் கொண்டே குடித்துவிட்டு மீண்டும் அந்த அறைக்குள் நுழைந்து விடுவான். கௌரியிடம் ஏதாவது வம்புக்குப் போவான்.

''அம்மா! இந்தக் கிட்டாவைப் பாரு!'' கௌரி இரைவாள். 'அம்மா' என்ற பெயரைக் கேட்டதும் பிட்டு சுருண்டு உட்கார்ந்துவிடுவான்.

''அம்மா! என்னைப் பிட்டு ஸ்கேலாலே அடிக்கிறான்.'' இன்றைக்குக் கௌரியின் குற்றச்சாட்டு வேறு விதமாக இருந்தது. அவள் எழுந்து விட்டாள். அடுத்த அறைக்குப் போய் எட்டிப் பார்த்தாள்.

''என்ன, சின்னத்துரை, உடம்புக்கு ஏதாவது வேண்டியிருக்கிறதா?''

அவன் தலையை நிமிர்ந்து பார்த்துவிட்டுக் குனிந்துவிட்டான். அவளுக்கு அந்தப் பார்வை பிடிக்கவில்லை. அது அவனது அப்பா பார்க்கும் பார்வைதான்! அதைக் கண்டாலே எரிகிறது.

உண்மையில் பிட்டு அவன் அப்பா சாயல்தான்! அதே பார்வை! அதே வக்கரிக்கும் முகம்! அதே தலை, அதே கண், மூக்கு, வாய்! முழுக்க முழுக்க அவரேதான்! அதை நினைக்கவே அவளுக்குப் பகீரென்றது. மேலும் எரிச்சல் குமைந்து வந்தது. இவனும் அவன் அப்பா மாதிரி மாறிவிடுவானோ? அப்படியானால் இவனுக்கு எந்தப் பெண் மனைவியாக வாய்த்துக் கஷ்டப்படப் போகிறாளோ?

அவர் தோற்றம் இப்போதுதான் எரிச்சலைத் தருகிறது. பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு முன் அவர் தோற்றம் அப்படியா எரிச்சலைக் கிளறியது? அவளுக்கே ஆச்சரியமாக இருந்தது. அப்போது அவர் முகத்தைக் கண்டால் ஒருவிதக் கவர்ச்சி தோன்றவில்லையா? அவர் கண்கள் கொட்டுவதைக் கூட ஓர் அழகு ஆட்டமாக நினைக்கவில்லை? கனத்து வழியும் அவரது தடித்த உதடுகளில் புன்னகை தவழுவதைக் கண்டு உன்மத்தமாகவில்லை?

இப்போது...? அதை நினைத்தாலே நெஞ்சு பகீரென்கிறது. அந்த நாட்களெல்லாம் வெறும் ஏமாற்ற நாட்களாகத் தோன்றுகின்றன. தான் எப்படி அவ்விதம் ஏமாந்தோம் என்பது ஆச்சரியமாகவே யிருக்கிறது.

மணி ஆறு அடித்தது. அவள் உள்ளே போனாள். இன்றைக்கு ஒன்றும் பெரிய சமையல் செய்யப் போவதில்லை. அதற்கு இப்போது மனமும் இல்லை. அவர் என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். சாதம் வடித்துத் துவையலை அரைத்து விட்டு வேண்டுமானால் இரண்டு அப்பளங்களைச் சுட்டு வைத்துவிட வேண்டியதுதான். அதற்கு மேல் உடம்புக்குத் தள்ளாது. உள்ளே போய் 'ஸ்டவ்'வை மூட்டிவிட்டாள்.

உலை கொதிக்க ஆரம்பித்து விட்டது. அவளுக்கு ஒரே அசதியாகத் தோன்றியது. பகலெல்லாம் பள்ளிக்கூடத்தில் குழந்தைகளோடு போராட்டம். வீட்டுக்கு வந்த பிறகாவது நிம்மதியா?

இப்போது சோறு வேகிறது. எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையே வீட்டு வேலையையும் செய்கிறோம். ஆனால் அவர் காலா காலத்தில் வந்து சாப்பிட்டால்தானே! மணி ஆறாகி விட்டது. ஆபீஸிலிருந்து ஐந்து மணிக்கு வெளியே வருகிறவர் நேராக வீட்டுக்கு வந்தால்தானே? வீட்டைப் பற்றி அக்கறை இருக்கிறதா? நேராக நண்பர்களோடு சீட்டாடப் போய்விடுகிறார். போதாததற்கு இப்போது நாடகப் பைத்தியம் வேறு பிடித்து விட்டது. ஆபீஸில் நண்பர்கள் எல்லோரும் சேர்ந்து நாடகம் நடிக்கிறார்கள். அவர்கள் ஒன்றும் இவருக்குப் பிரமாத வேஷம் கொடுத்து விடுவதில்லை. இவருக்கு மேடை ஏறினால் ஒழுங்காகப் பேசவும் தெரியாது. நடிக்கவும் வராது.' ஏதோ துணைப் பாத்திரமாக நடிப்பார்! அதற்கே இந்தப் பாடு! ஒரே ஆர்வம்! உற்சாகம்; வெறி என்றுகூடச் சொல்ல வேண்டியதுதான்.

இடையிடையே ''உமா, உமா'' என்று ஏதோ ஒரு நடிகையின் பெயரைக் கூறுகிறார். அந்தப் பெயரைச் சொல்லும்போதே அவளுக்கு எரிச்சலாக இருக்கிறது. அவளை இரண்டு வார்த்தைகள் அவர் புகழ்ந்து விட்டால் கோபம் மண்டிக் கொண்டு வருகிறது.

மணி ஏழு! சமையல் முடிந்து விட்டது. அவள் முகத்தைக் கழுவிக் கொண்டு கூடத்தில் வந்து நின்றாள். திருப்பதி வெங்கடாசலபதி படத்தின் முன் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. படத்தின் முன் கைகளைக் கூப்பிவிட்டுத் திரும்பியபோது கௌரி அவளை ஏறிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அம்மா! இன்னும் அப்பா வரவில்லையா?''

''எல்லாம் வருவார்.''

மூலையில் சின்னதுரை ஏதோ எழுதுவது போல் பாசாங்கு செய்து கொண்டிருந்தான். அவனை வெறித்து நோக்கிவிட்டு அவள் வெளியே வந்து நின்றாள். மாடிக் கைப்பிடிச் சுவர் அருகில் திண்ணை போல் ஒரு மேடை. அதில் அமர்ந்து கொண்டு கீழே தெருவைப் பார்க்கலானாள்.

அந்த நாட்களில் இங்கே உட்கார்ந்து அவர் வரவை நோக்குவது எவ்வளவு இனிமையாக இருந்தது? கல்யாணமான புதிதிலேயே இந்த வீட்டுக்கு வந்தாகி விட்டது. அப்பொழுதெல்லாம்.... பகலில் வேலை செய்யும்போது ஒவ்வொரு கணமும் அவர் நினைவே தோன்றிக் கொண்டிருந்தது. மனத்தில் மாத்திரம் சிலிர்ப்பு ஏதோ குமிழ்த்துக் குமிழ்த்து வந்துகொண்டிருந்தது. மாலை நான்கு மணியாகிவிட்டால் அவளுக்கே பரபரப்புத் தோன்றிவிடும். முகத்தைக் கழுவிப் புதிது அணிந்துகொண்டு மை நிறைந்த கண்களோடு உள்ளுக்கும் வாயிலுக்குமாய் ஆயிரம் நடை அவள் நடந்தாகிவிடும்.

கல்யாணமான புதிதில் அவர் வாங்கித் தந்த சின்ன ரோஸ்வுட் பெட்டியைப் பற்றி நினைவு வந்தது. இழை இழையாய்ப் பின்னிய அலைகள் அப்படியே சித்திரமாக உறைந்து விட்டாற்போல் அதன் வடிவழகைப் பார்ப்பதற்கே கொள்ளை இன்பமாய் இருந்தது. மூடியை மெள்ளப் பிரித்து வைத்தபோது உள்ளே குட்டி சூரியன் போல் பளீரென்று ஒளி பாய்ச்சும் வட்டக் கண்ணாடி கண்களைக் குத்தும்படியாய் மின்னியது. வெளிச்சத்தின் கிரணம் விழாமல் சற்று ஒதுக்கிப் பார்த்தால்தான் அது முகம் பார்க்கும் கண்ணாடியாகத் தன்னைக் காட்டிக் கொள்கிறது. அதில் பார்த்தால் முகம் ஏதோ சலவைக் கல் பிம்பம் போல் துல்லியமாய், வழிந்த அழகுடையதாய் 'ஸ்...ஸ்...ஸ்...' என்று உறிஞ்சி ''இவ்வளவு அழகா நான்?'' என்று சொல்லும்படியாகத் தெரிந்தது. பெட்டியின் நடுப் பகுதியில் சிவப்பாய் மடிந்த வெல்வெட்டு மெத்தையில் பொருந்தி அழுந்தியதாய், கூட்டுக்குள் முட்டை போல் ஒரு குங்குமப் பேழை தீயாய் ஜொலித்து உட்கார்ந்து கொண்டிருந்தது.

''இது என் முதல் பரிசு! இன்னும் எவ்வளவோ தொடரும்.'' அதைச் சொல்லிய போது அவர் முகத்தில் தோன்றிய பெருமை!

அதற்குப் பிறகு எவ்வளவோதான் புடவை நகை, வளையல் என்று வாங்கித் தந்தார். ஆனால் இப்போது ஒரு முழம் பூ வாங்கிக் கொண்டு வரக்கூட....

''அம்மா!''

அவள் திடுக்கிட்டாள். கௌரி நின்று கொண்டிருந்தாள். ''சாப்பாடு போட வருகிறாயாம்மா?''



''இதோ வரேன்.''

உள்ளே குழந்தைகளுக்குச் சாதம் போட்டாகிவிட்டது. சிறிது நேரத்தில் அவர்கள் படுத்து உறங்கி விடுவார்கள்.

கூடத்தில் அவள் வந்து நின்றாள். சுவர்க் கடிகாரத்தைப் பார்த்ததும் அவள் திடுக்கிட்டாள். மணி ஒன்பது. அவர் ஏன் இன்னும் வரவில்லை?

நாடக ஒத்திகையிருந்தாலும் இவ்வளவு நாழிகையாகாது. அவர்கள் அமர்ந்திருக்கும் வாடகை அறையில் இரவு எட்டு மணிக்கு மேல் கூத்தடிக்க விடமாட்டார்கள். ஒத்திகை நாட்களில் கூட எட்டரை மணிக்கு வீடு வந்து விடுவார்.

மணி பத்தடித்தது. மணி பத்தா? அதற்குள் பத்தாகி விட்டதா? அல்லது ஒருவேளை ஒன்பதோ? மெள்ள எழுந்துபோய் அறையுள் எட்டிப் பார்த்தாள். உண்மையில் மணி பத்தாகி விட்டிருந்தது.

''அப்பா இன்னும் வரவில்லையா, அம்மா!''

''நீ ஒருத்தி!'' அவள் எரிச்சலோடு கௌரியைப் பார்த்தாள். கௌரி முகத்தைக் கைகளால் மூடி ஒருக்களித்துக் கொண்டாள்.

என்ன காரணமாக இருக்கும்? ஒருவேளை இரவு சினிமா ஆட்டத்துக்குப் போயிருப்பாரோ? யார் கண்டார்கள்? எதையாவது அவர் சொல்லிச் செய்யும் பழக்கம் இருந்தால்தானே?

மீண்டும் வெளி மாடிக்கு வந்து அமர்ந்து கொண்டாள். இப்போது தெருவைப் பார்க்கவே பயமாக இருந்தது.

''சீ! இவர் எப்போதுமே இப்படித்தான்!'' அவள் நொடித்துக் கொண்டாள். எந்த ஒரு விஷயத்தில் அவள் மனம் போனபடி அவர் நடந்து கொண்டிருக்கிறார்? எல்லாம் நாறு மாறாகி விட்டது. சீட்டாட்டத்தில் பணம் தொலைகிறது. எங்கும் கடன்! இந்த லட்சணத்தில் அவள் 'வேலைக்குப் போகிறேன்' என்று புறப்பட்டபோது அதற்கு வேறு குறுக்கே நின்றார். அவள் மட்டும் போயிரா விட்டால் குடும்ப கதி அதோகதிதான்! அவள் கொண்டு வரும் நூற்றி இருபது ரூபாய்தான் சற்று மானத்தைக் காப்பாற்றுகிறது. இப்போது பணம் வருகிறதென்று தெரிந்தவுடன் வேலைக்குப் போவதா போகக் கூடாதா என்ற பிரச்னையைப் பற்றிப் பேசா திருந்துவிட்டார். அவருக்கு என்ன? அவர் செலவு நடந்து வருகிறது.

இலேசாகக் குளிர் காற்று வீசியது. அவளுக்கு இந்த ஊதக் காற்று உடலுக்கு ஒத்துக் கொள்ளாது. மேலே இழுத்துப் போர்த்திக் கொண்டாள்.

ஒருவேளை ரங்கநாதன் வீட்டில் இருப்பாரோ? அங்கு போய்ப் பார்த்தால் என்ன?

உள்ளே வந்தாள். மணி பத்தரை! சலசலப்புக் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். கௌரி விழித்துக் கொண்டிருந்தாள்.

''அப்பா வரவில்லையா?''

''நீ தூங்கு, கௌரீ!''

அவள் மாடிப் படிகளில் இறங்கினாள். எங்கும் சுவர்க் கோழிகளின் கிர்ரென்ற ஒலி! பூமியின் கர்ப்பத்துக்குள் இறங்குவதுபோல் ஒரே பாழ் இருள்!

கீழே மூன்று குடித்தனங்கள்! அவர்களுக்கும் இவளுக்கும் சம்பந்தமே கிடையாது. அவர்கள் யார் என்றுகூட அவளுக்குத் தெரியாது. மாடிக்குத் தனி வழி. வெளியே இறங்கி வந்தாள். குளிர் காற்று சற்று அதிகமாக வீசியது. தெருவைப் பார்ப்பதற்கே பயமாக இருந்தது. நாலைந்து அடிகளுக்கு அப்பால் உலகமே முடிந்துவிட்டாற் போல் ஒரே அந்தகாரம்!

நடக்கும்போதே உடல் நடுங்கியது. 'சரக் சரக்'கென்று தன் செருப்பின் ஒலிகளே நாராசமாகப் பட்டன. இந்த நிசப்தத்தில் ஒலி எழுந்தாற்கூட அது அமங்கலமாகத் தோன்றியது. கீழே தெருவில் நடக்கும் போதுதான் பயம் அதிகமாகி விட்டது. தன்னை யாரோ சூழ்ந்து கொண்டு வருவது போல் பிரமை! இருளே அவள் கைகளைக் கோத்துக் கொண்டு அங்குமிங்கும் இழுப்பது போலிருந்தது.

தெருவின் கோடி வரை வந்துவிட்டாள். டீக்கடை விளக்கு சற்றுத் தைரியம் கொடுத்தது. யாரோ ஒருவன் ஓர் அரைக் கிளாஸ் டீயைக் கையில் சுழற்றிக் கொண்டே அவளை அரை விழிப்போடு பார்த்துக் கொண்டிருந்தான். அவள் நடுங்கியவாறே மெள்ள அடுத்த தெருவுக்குள் நுழைந்துவிட்டாள்.

தெருவின் நடுவில்தான் ரங்கநாதன் வீடு இருந்தது. நாலெட்டில் வீட்டை அடைந்து விட்டாள். நல்லவேளை! உள்ளே நடு அறையில் விளக்கு எரிந்தது. யாரோ படுக்கையை உதறிக் கொண்டிருந்தார்கள்.

''மாமீ....''

''யாரு?....''

வாயிற் கதவைத் திறந்தார்கள். அந்த மாமி வந்தாள். விஷயத்தைக் கேட்டுக் கொண்டாள். பிறகு ரங்கநாதனே வந்தார்.

''யாரு! சாரதியா? சாயங்காலம் அஞ்சு மணிக்கு ஆபீஸிலே பார்த்தேன். அப்புறம் பார்க்கவில்லையே!''

''ஆபீஸிலே மீட்டிங், கீட்டிங் ஒன்றும் கிடையாதே?''

''கிடையாதே?''

அவள் திரும்பினாள். அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. 'இப்படி ஒருவரைப் புருஷராகப் பெற்றேனே!' என்று மனம் நொந்து கொண்டது. அவரது பொறுப்பில்லாத தன்மையை நினைக்கும்போது அந்த எண்ணம் அவள் உள்ளத்தில் பேருருவாய் வளர்ந்து துக்கமாய் நெஞ்சை அடைத்துக்கொண்டது. இதயம் நெரிந்து அழுகைக் குமுறல்களாய் வெளி வந்தன. மீண்டும் டீக்கடையைத் தாண்டி விட்டாள். இப்போது முன்னிலும் பயம்! தான் திடீரென்று அநாதையாகி விட்டது போல் தோன்றியது.

மாடிப் படிகளில் ஏறினாள். நெஞ்சம் திக் திக்கென்றது. ஒருவேளை அவராக இதற்குள் வீட்டுக்கு வந்திருப்பாரோ? மெதுவாகக் கதவைத் திறந்து கூடத்துள் நுழைந்தாள்.

''அப்பா வரவில்லையாம்மா?''

''நீ தூங்கப் போகிறாயா, இல்லையா, சனியன்!''

அவள் சமையலறையுள் நுழைந்தாள். விளக்கைப் போட்டவுடன் ஒரு பூனை சன்னல் வழியே ஓடியது. சன்னல்களைச் சாத்தி விட்டாள். அடுப்பின் மீதுள்ள வெண்கலப் பானையைத் தொட்டுப் பார்த்தாள். ஒரேயடியாய்ச் சில்லிட்டுக் கிடந்தது.

அந்தச் சில்லிடும் குளிர் அவள் உடலுள்ளே பாய்வது போல் இருந்தது. மேலெல்லாம் நடுங்க ஆரம்பித்தது. வழியும் கண்ணீரைத் துடைக்காமல் மூலையிலேயே அமர்ந்து விட்டாள்.

அவர் இப்படியா பொறுப்பில்லாதவரா யிருப்பார்? வீட்டுக்கு ஏன் திரும்பவில்லை? காரணம் எதுவாயிருக்கும்? எப்படியானாலும் அவர் இத்தனை நாழிகைக்கெல்லாம் வீடு திரும்பி விடுவாரே? இதற்கு மேல் ஒரு நாளும் நாழியானதில்லையே. பின் ஏன்?...

இரண்டு மூன்று தடவை வெளி மாடிக்கும் உள்ளுக்குமாய்ப் போய் வந்தாள். கடைசித் தடவை போனபோது பக்கடை விளக்கும் அணைந்து விட்டது.

ஏன் வரவில்லை? எங்கேயாவது புது இடத்தில் சீட்டாடிக் கொண்டிருப்பாரோ? யார் வீட்டிலாவது போய்ப் படுத்து உறங்கி யிருப்பாரோ? அல்லது ஒரு வேளை...?

அவருக்கு ஏதாவது நேர்ந்து...? நாளைக் காலையில் அந்தச் செய்தி ஊரெல்லாம் பரவி அது தன் காதுக்கும் எட்டி....அப்பா! மனம் சிலீரென்றது. ஒருவேளை தானே போய் அவரை அந்த நிலையிலே பார்க்க வேண்டி யிருக்குமோ? இதயம் ஒருதரம் குலுங்கி விட்டது. ஏன் இந்த மாதிரி நினைக்கிறோம்?

அந்த எண்ணத்தையே உலுப்பிக் கீழே தள்ளுவது போல் தானே எழுந்து நின்று உடலை ஒருதரம் குலுக்கிக் கொண்டாள். பிறகு கூடத்துள் நுழைந்தாள். உள்ளே மெல்லிய நீல நிற விடிவிளக்கு எரிந்துகொண் டிருந்தது. அறையே விஷமுண்டிருப்பது போல் அதன் நீலம் சுற்றிலும் பரவியிருந்தது. அவள் கண்களுக்கு அந்த ரோஸ்வுட் பெட்டி டீமரென்று தென்பட்டது. கால்கள் உடனே பரபரத்தன. எத்தனை நாட்கள் இந்தப் பெட்டியைக் கவனியாது விட்டு விட்டோம்?

அருகில் போய்ப் பெட்டியைக் கையிலெடுத்தாள். நடுங்கும் கரத்துடன் அதைத் திறந்தாள். மனமே நடுக்கமெடுத்தது. இந்தக் குங்குமப் பேழையை எவ்வளவு காலம் கவனியாது இருந்து விட்டோம்? பேழையின் மூடியைத் திறந்தாள். எப்போதோ வைத்திருந்த குங்குமம் இன்னும் அதில் தேங்கிக் கிடந்தது. அவசரம் அவசரமாக ஒரு விரலால் வழித்து நெற்றியில் இட்டுக் கொண்டாள். கண்களில் நீர் நிறைந்து விட்டது. அவர் இல்லாவிடில் தன் வாழ்வு.... அதை நினைக்கவே என்ன பயமாக இருக்கிறது?

''அம்மா!''

இப்போது அவளுக்குக் கோபம் வரவில்லை. கௌரியை ஏறிட்டுப் பார்த்தாள்.

''அப்பா?''

''வருவார்....''

வெளி மாடிக்கு வந்தாள். இருட்டைப் பார்ப்பதற்கே பயமாக இருந்தது. கலவரத்தோடு மீண்டும் உள்ளே புகுந்தாள். கடிகாரத்தை ஏறிட்டுப் பார்த்தாள். மணி பதினொன்று.

''வீண் கலவரம் எதற்கு? எப்படியாவது வந்து சேருவார்.'' ஈஸிச் சேரில் சாய்ந்து கொண்டு கால்களை நீட்டித் துவள விட்டாள். உடம்பில் இவ்வளவு அசதி எங்கிருந்து வந்த தென்று தெரியவில்லை. இத்தனை நேரம் மறைந்திருந்த அலுப்பு இப்போது அவளை




''எழுத்தாளர்னு எல்லோரும் பெரிய எழுத்தாளராக ஆகிவிட முடியுமா? இனிமே எங்க தாத்தாவைப் போல் பெரிய எழுத்தாளர் கிடையாது!''

''அப்படியா? அவர் என்ன எழுதினார்?''

''எனக்கு ஏராளமான சொத்தை எழுதி விட்டுப் போயிருக்கார்!''

மொய்த்துக் கொண்டது. சிறிது நேரம் மனம் வெவ்வேறு நினைவுகளில் சுழன்றது. கடைசியில் உடலின் அலுப்பு மனத்தை ஒடுங்க வைத்துவிட்டது.

நினைவு இழுத்துக் கொண்டது. கண்கள் அரை மடிப்பில் மறைந்துவிட்டன. அது தூக்கமா, பிரமையா? ஏதோ ஒரு நடு நிலை! நினைவு இயங்குகிற மாதிரியும் இருக்கிறது.

அவளது கணவர் உருவம் தோன்றிவிட்டது. இரவு பத்து மணி வரை ஒரு வீட்டில் சீட்டாடுகிறார். கையில் இருந்த பணமெல்லாம் காலி! வெளியே வரும்போது சோர்ந்து வருகிறார். கவலை தோய்ந்து, முகம் கன்றிப் போயிருக்கிறது.

வெளியே ஒரே இருட்டு. மெதுவாகத் தடுமாறி நடக்கிறார். நினைவும் தடுமாறுகிறது. தவறான சாலையில் நுழைந்துவிட்டுப் பிறகு திகைத்துப் போய்த் திரும்பிச் சரியான சாலையில் நுழைகிறார். நீண்ட சாலையின் குறுக்கே அரை நினைவாய் நடக்கிறார். எதிரே பொறிகளைச் சிந்தும் கண்களுடன் ஒரு லாரி வருகிறது. அது முன்னாலிருந்து வருகிறதா, பின்னாலிருந்து வருகிறதா என்று தெரிய வில்லை. தான் இடது பக்கம் போக வேண்டுமா, வலது பக்கம் போக வேண்டுமா என்று தெரிய வில்லை. தானே எந்தத் திசையில் போகிறோம் என்ற உணர்வும் இல்லை. எங்கே யாவது நகர வேண்டும் என்று நகர்கிறார்.

''சச்...'' லாரி திமிறிப் போய் நிற்கிறது.
''முனுசாமி! கீழே இறங்கிப் பாரு! ஆளு அகப்பட்டுக்கிட்டான்!''

கீழே அவர், ரத்தம் தோய்ந்த பூமியின் கையும் காலும் விரிய முகம் கோணிப் போய்க் கிடக்கிறார்.

"தள்ளி இழுத்துப் போட்டு விட்டு வண்டியிலே ஏறு! கூட்டம் கூடப் போவுது!"

லாரி பறந்து விடுகிறது. பிறகு யாரோ வருகிறார்கள். ஒன்று இரண்டென்று சிறு திரள் கூடுகிறது. "போலீஸ்... ஆம்புலன்ஸ்" என்று பலவிதக் குரல்கள்.

ஆம்புலன்ஸில் ஏற்றியவுடன் மூச்சைப் பார்க்கிறார்கள். மூச்சு கடைசியாக இருக்கிறது. பிறகு அதுவும் நின்று விட்டது. பையில் உள்ள சீசன் டிக்கெட்டில் விலாசம் தெரிகிறது. "வண்டியை வீட்டுக்கு விடு" என்கிறார்கள். அவர்களது தெருவுக்குள் கார் நுழைகிறது. வீட்டு வாசல் முன் வந்து நிற்கிறது.

"அம்மா, அம்மா! இதுதானா பதினாலாம் நம்பர் வீடு?"

குரல்கள் கேட்கின்றன. ஐந்தாறு பேர்களின் காலடியோசை கேட்கிறது. எல்லாம் கலவரமாய்த் தோன்றுகிறது.

"அம்மா! அம்மா!"

அவள் திடுக்கிட்டுக் கண்களை விழிக்கிறாள். துடைத்து விட்டுக் கொண்டு நன்றாகப் பார்க்கிறாள். மணி பன்னிரண்டாகியிருக்கிறது. இத்தனை நாழிகை அனுபவித்தது கனவா? கனவுதானே! கலவரத்தோடு சுற்றிப் பார்க்கிறாள் அவள். அடித்துக் கொண்ட நெஞ்சு சற்று அமிழ்கிறது.

"அம்மா! அம்மா!"

உண்மையில் யாரோ கீழே கூப்பிடுகிறார்கள். அவளுக்கு மீண்டும் உதறலெடுக்கிறது. தான் காண்பது கனவா, நனவா?

"அம்மா! அம்மா?"

சிரமத்துடன் அவள் எழுந்திருக்கிறாள். வெளி மாடிக்கு வருகிறாள். வரும்போதே கீழே கலவரக் குரல்களும் திமு திமுவென்று ஓசைகளும் கேட்கின்றன. அமிழ்ந்த பயம் திடீரென்று பொங்கி எழுகிறது. மேல் புடவையைக் கையில் பிடித்துக் கொண்டு கீழே நோக்கி மெள்ள எட்டிப் பார்க்கிறாள். அவளுக்குத் தூக்கிவாரிப் போடுகிறது. ரத்தம் உறைந்து போய் விடுகிறது. உடம்பே சில்லிட்டு விடுகிறது. கண்களைக் கசக்கிப் பார்க்கிறாள். கீழே நிற்பது ஆம்புலன்ஸ் வண்டிதான். சுற்றி வர நாலைந்து பேர்கள்! காரின் பின்புறத்திலிருந்து ஒரு ஸ்ட்ரெச்சரைக் கால் பங்கு வெளியே இழுத்து இருவர் பிடித்துக் கொண்டிருந்தார்கள். ஸ்ட்ரெச்சரில் ஒரு வெள்ளைத்துணி போர்த்திய உருவம்! .....அம்மா!

"பதினாலாம் நம்பர் வீடு இதுதானே, அம்மா?"

அவள் வாய் உலர்ந்து விட்டது. தொண்டை அடைத்துக் கொண்டு விட்டது. ஒரு பெரும் சக்தி அவளை இழுத்துக் கீழே தள்ளுகிறது. கைப்பிடிச் சுவர் நழுவுகிறது. நெஞ்சை அழுக்கியவாறு கீழே உட்காருகிறாள். தலை சுற்றி விடுகிறது. நினைவும் இருட்டடித்துப் போய், உடல் தூக்கித் தூக்கிப் போடுகிறது. 'அம்மா' என்று விம்மி அழுகிறாள்.

ஒரு கணம்! இரு கணம்! மீண்டும் தன் நினைவு வருகிறது. கண்களில் நீர் வெள்ளமாய் வடிகிறது. புலம்பிக் கொண்டே மெள்ள எழுந்திருக்கிறாள். தான் ஏன் கீழே போக வேண்டும்? போகாமலே இருந்தால் என்ன? கைப் பிடிச்சுவரைப் பிடித்துக் கொண்டு எழுந்திருக்கப் பார்க்கிறாள். உடல் மெள்ளத் தன் வசமாகிறது. கீழே யார் கதவைத் திறக்கிறார்கள்? கண்களைத் துடைத்துக் கொள்கிறாள். கதவைத் திறக்காமலேயே இருக்கக் கூடாதா? பகவானே! எதற்காகக் கதவைத் திறக்கிறார்கள்?

பேச்சுக் குரல் கேட்கிறது. விசாரிப்பும் பதிலும் தொடர்கின்றன. கீழே யாரோ விம்முவதும் கேட்கிறது. உடன் அவள் உடலில் பரபரப்பு!

தலை நீட்டிக் கீழே கூர்ந்து கவனித்தாள். ஸ்ட்ரெச்சரை வெளியே இழுத்தார்கள். பிறகு கீழே உள்ள போர்ஷனுக்குள் அதைக்கொண்டு போனார்கள். தான் பார்ப்பது நிஜந்தானா?

அப்பா! நெஞ்சத்துள் ஒரு வெளிச்சம் அடித்து விட்டது. உள்ளத்தில் கவலைகள் படீரென்று தெளிந்து விட்டன. தலையைத் தூக்கியெடுத்துக் கட்டிக் கொண்டு மாடிப் படிகளில் தடதட வென்று இறங்கினாள். வாயிலில் எட்டிப் பார்த்தாள். கீழே வாழும் குடித்தனங்களில் உள்ள ஒரு மாமி நின்று கொண்டிருந்தாள்.

"என்னவாம்? மாமி?"

"மீனாட்சி வீட்டுலே ஒருத்தர் இருந்தாரே! அவர் மேலே லாரி ஏறிச் செத்துப் போய் விட்டாராம்!"

"யார்? அந்த மாமியின் புருஷரா?"

"இல்லே, இல்லே! அவள் மாமனார்! வயதானவர்தான்!"

அவளுக்கு ஒரு நிம்மதி பிறந்தது. உள்ளத்தில் வெளிச்சம் பகல் போல் பிரகாசமாகி விட்டது.

கீழ்க் குடித்தனத்தில் அழுகை ஆரம்பமாகி விட்டது. அவளுக்கு இன்பமும் அழுகையும் கலந்து வந்தன. கண்களை மூடிக் கொண்டு சிறிது நேரம் விசித்தாள். பிறகு மாடிப்படி ஏறலானாள்.

மேலே கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே நுழைந்தாள்! ஒரு கணந்தான்! மறுகணம் அது திறக்கப்படும் சத்தம் கேட்டது! திரும்பினாள். அவர்தான்! அவரே தான்! அவள் கண்கள் மலர்ந்தன.

"கல்கத்தா அம்பி வந்திருந்தான்! பேசிக் கொண்டேயிருந்து விட்டேன்."

அவளால் பேச முடியவில்லை! நெஞ்சு அடைத்துக் கொண்டது. அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவர் முகந்தான் என்ன களை! என்ன எடுப்பு! என்ன குறுகுறுப்பு! அவர் முழு உருவமும் உயிர் ததும்பும் கம்பீரமாய் என்ன அழகாயிருக்கிறது! மனம் விரிந்து, ஓர் எல்லையிலா இன்பத்தை அனுபவிப்பது போலிருந்தது.

"சாதம் ஆறியிருக்குமோ?"

"திரும்ப வேண்டுமானாலும் பொங்கட்டுமா?"

அவள் பொங்கி வழிந்தாள்.



# இருட்டில் நடந்தது

ரா.வீ

ராத்திரி ஏழு மணி இருக்கும். அனந்துப் பாட்டி பூஜை அலமாரிக்கு எதிரில் குத்து விளக்கை ஏற்றி வைத்துவிட்டு ஜபத்துக்கு உட்கார்ந்தாள்.

அவள் பாதி ஜபம் செய்து கொண்டிருந்த பொழுது பூஜை அலமாரிக்கு மேலே இருந்த தட்டிலிருந்து பொத்தென்று ஏதோ ஒன்று கீழே விழுந்தது.

அனந்துப் பாட்டி தன் வெள்ளெழுத்துப் பார்வையுடன் சத்தம் கேட்ட இடத்தை நோக்கினாள். நீளமாக ஏதோ விழுந்து கிடந்தது தெரிந்தது.

பாட்டி பயந்துபோய் எழுந்தாள். வாசல் திண்ணையில் சந்தியாவந்தன ஜபம் செய்து கொண்டிருந்த கப்புத் தாத்தாவை அழைத்தாள்: "இந்தாருங்கோன்னா! நடுக் கூடத்திலே பாம்பு! சீக்கிரம் எழுந்து வாங்கோ!"

கப்புத் தாத்தா அவசரம் அவசரமாக அடுத்த வீட்டுப் பஞ்சாமியை அழைத்துக் கொண்டு கையில் ஒரு மூங்கில் தடியுடன் உள்ளே நுழைந்தார்.

குத்துவிளக்கு வெளிச்சத்தில் அவருக்கு ஒன்றும் புலப்படவில்லை. பஞ்சாமியோ ஏகப் [illegible]. தூரத்தில் நின்ற வண்ணமே, "தாத்தா! அதோ பாம்புதான் படுத்திருக்கு!" என்றான்.

"அரிக்கேன் விளக்கை ஏற்றி வைக்கப்படாதோ!"

"மண்ணெண்ணெய்க்கு எங்கே போறது?" என்றவாறே அனந்துப் பாட்டி குத்துவிளக்கைத் தூண்டிவிட்டாள்.

"என்ன தாத்தா! பாம்பு விழுந்த இடத்தை விட்டு நகராமலே கிடக்கே!"

"இரைகிரை முழுங்கியிருக்கும்டா!"

"தாத்தா! அந்த மூங்கில் தடியை இப்படிக் கொடுங்கள், ஒரு கை பார்த்து விடுகிறேன்!" என்ற பஞ்சாமியின் குரலில் பதற்றம்தான் மேலோங்கியிருந்தது.

அனந்துப் பாட்டி போட்ட கூச்சலிலே தெருவில் உள்ள சின்னக் குழந்தைகள் கூட உள்ளே வேடிக்கை பார்க்க வந்துவிட்டன. தெருவிலோ பெரிய ஆட்கள் யாரையுமே காணோம். "சந்தியாகாலம் ஆச்சே! அவாள்கள் ஆற்றங்கரைக்குப் போயிருக்கா போலிருக்கு!" என்று கூறிய அனந்துப் பாட்டி சின்னக் குழந்தைகள் யாரையும் உள்ளே வரவிடாமல் தடுத்தாள்.

தாத்தா மூங்கில் தடியைக் கொடுத்த வண்ணம் "ஏண்டா, பஞ்சு! பாம்பு நகர்ந்துட்டுதோ?" என்று கேட்டார்.

"இன்னும் இல்லே தாத்தா! இரை விழுங்கி விட்டதனால் அசைய மாட்டாமல் கிடக்கிறது. ஒரு போடு போடுகிறேன் மண்டையிலே!" என்று கூறித் தடியைக் கையில் வாங்கிக் கொண்டான் பஞ்சாமி.

"பேர் ஜாக்கிரதை! தூர இருந்தே அடி. நல்ல பாம்பாயிருந்தால் சீறிண்டு மேலே பாயும்" என்று எச்சரித்தார் தாத்தா.

தாத்தாவின் சொற்படி திரும்பி ஓடுவதற்கும் தயாராக நின்றுகொண்டு தூரத்தில் நின்ற வண்ணமே கண்களை மூடிக் கொண்டு ஒரு போடு போட்டான் பஞ்சாமி.

கண்களை மூடிக்கொண்டு அடித்தாலும் அவனது குறி தவறவில்லை. ஒன்று, இரண்டு, மூன்று—நான்கு அடிகள் அதன்மேல் விழுந்து விட்டன. அப்பொழுதும் அது அசைந்து கொடுக்கவில்லை.

"இரை தின்னுட்டு வந்து என் கையிலே மாட்டிக்கொண்டு இன்று பரலோகம் போய்ச் சேர்ந்துவிட்டது அது. அடிச்ச அடியிலே இரத்தம் கூட வந்துவிட்டாற்போலிருக்கிறது. இனிமேல் தைரியமாக் கிட்டப் போகலாம். இருந்தாலும், பாட்டி! குத்து விளக்கை இன்னும் கொஞ்சம் கிட்டத்தில் எடுத்து வையுங்கோ!" என்றான் பஞ்சாமி.

பாட்டி நடுங்கிய கரத்துடன் குத்து விளக்கை அருகில் எடுத்து வைத்தாள்.

"என்னடி! பாம்பு செத்துப் போயிடுத்தோல்லியோ?" என்று கேட்டுக் கொண்டே கப்புத் தாத்தாவும் சற்று அருகில் போனார்.

பஞ்சாமி அருகில் சென்றவன், "ஒரு வேளை பாம்பு இல்லையோ, தாத்தா?" என்று கேட்டான்.

"பாம்பு இல்லாமல் வேறு என்னவாயிருக்க முடியும்டா?" என்று கேட்ட வண்



ணம் தாத்தா கீழே குனிந்து பார்த்தார். பிறகு அண்ணாந்து தட்டியைப் பார்த்தார். மீண்டும் கீழே குனிந்து பார்த்தார்.

"என்ன அப்படிப் பார்க்கிறேள்?" என்று கேட்டாள் அனந்துப் பாட்டி.

"ஒன்றுமில்லை. இன்றைக்குக் காலையில் கீரையை ஆய்ந்துவிட்டுக் கீரைத் தண்டை எங்கே வைத்தாய்?"

"தட்டி மேலேதான்!"

"அது வைத்த இடத்தில் இருக்கோ, பாரு!" என்றார் தாத்தா.

பாட்டி தன் மங்கிய பார்வையை மேலே ஓட்டினாள். அதற்குள் பஞ்சாமி பார்த்து முடித்து விட்டான்.

"தாத்தா! துவண்டு வாடி வதங்கிப் போன வெள்ளைக் கீரைத் தண்டுதான் பாம்பாகிப் பரலோகம் போயிருக்கு. நாளைக்கு உங்களுக்குப் பிடித்த கீரைத்தண்டு பொரிச்ச கூட்டுக்கு அது பயன்படாது!" என்றான்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# வாழ்க்கை ஒளிகளின் வனப்பான அழகு



ஸான்போரைஸ்ட் பாப்ளின்ஸ் :
கோல்ட் ட்ரிங்க், ப்ளூபர்ட், எவர் ப்ரைட்,
குட் ஷைன்.

ஷர்ட்டிங்ஸ் : ஸ்டிரைப், டாப்பி, செக்ஸ், பைஜாமா

தோதீஸ் : ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல்,
ப்ளாடினம், காம்ராஜ்





ஸூட்டிங்ஸ் :
காபர்டீன்

தேவையான கலர் புட்டாக்கள் :

ப்ரிண்ட்ஸ் :

ப்ரிண்டட் லான்ஸ், வாயில்ஸ், பாப்ளின்ஸ்,
ஸ்கிரீன் ப்ரிண்ட் ஸாரீஸ்

2x2 கவர்ச்சியான முழு வாயில்கள்—லினனிலும் புட்டாக்களிலும்

·SANFORIZED·

Arvind Quality Fabrics

# அரவிந்த்

மில்ஸ் லிமிடெட் அஹமதாபாத்

REGISTERED No. M. 4399
Registered as a Newspaper in Ceylon

